# ஸ்ரீ குமரகுருபரர்



தை 1 (14—1—82)

தோத்தி 4 பகுதி 4

உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய-இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீ மகாலிங்கப்பெருமான்

திருவுருவம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 4]    தை    [பகுதி 4

## பொங்கல் வணக்கம்

புத்தாண்டுப் பொங்கல் நாள் வருகிறது. இந்த இனிய நன்னாளில் ஸ்ரீ குமரகுருபரர் இதழ் வாசகர்கட்கு என் பணிவு வணக்கத்தை வைத்து மகிழ்கின்றேன்.

இந்த இதழில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய பண்டார மும்மணிக் கோவையின்-புராண, வரலாற்று, மரபு உவமை நலம் மிக்க-17-வது திருப்பாடலுக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் எளிய இனிய உரை விளக்கத்தை அருளியுள்ளார்கள்.

உலக முதல்வன் உவந்தேற்கும் கபாலி வேடத்தின் பெருமையினைப் 'பிச்சைத் தேவர்' எனும் கட்டுரையின்வழி அழகுறக்காட்டுகின்றார் 'திருக்கோயில்' ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் அவர்கள்.

'உயிர்கள் பக்குவமடைந்து இறைவனடி எய்துகின்றன' எனும் சித்தாந்தத்தின்படி ஒரு நாள் உயிர்களே இல்லாது போகுமா' எனும்வினாவிற்கு மகாவித்துவான் திரு. தண்டபாணி தேசிகர் அவர்கள் புல்லாய்ப் பூடாய்ப் பிறந்து வருகின்ற பிறப்பு வேறுபாடுகளுடனும் சைவ சித்தாந்தக் கருத்துக்களுடனும் அமையும் வகையில் விடையளித்துள்ளார்கள்.

இந்த வினா விடையாக பேரறிஞர் மு. அருணாசலம் அவர்கள் தனிக் கட்டுரையாக உயிர்களின் எண் - இறந்தநிலை எனும் பொருளில் அரியதோர் படைப்பை நல்கியுள்ளார்கள்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய 'மதுரைக் கலம்பகம்' பற்றிய கருத்தரங்கில் தலைமை வகித்த திரு. கம்பனடிப்பொடி அவர்களின் தலைமையுரை இவ்விதழில் இடம் பெறுகின்றது.

ஆதியுலாவின் அமைப்பினை மதுரை திரு. தா. குருசாமி தேசிகர் புலப்படுத்துகின்றார்.

இறைவனடி எய்துவிக்கும் நானெறிகளுக்குள் சரியை பற்றி விளக்குகிறார் சேலம் திரு. எஸ். இராமலிங்கம் அவர்கள்.

சாஸ்திர விளக்கப்பகுதியில் திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் சிவப்பிரகாசம் நூலுக்குத் தொடர்ந்து உரை விளக்கம் தந்துள்ளார்கள்.

மற்றும் லவட்ஸூ அறவுரைகள் இறக்குமதி திருக்கணித பஞ்சாங்கம் முதலான அங்கங்களும் இதழுக்கு அணி செய்கின்றன.

நி. ஆ-ர்.

உ

Siva Siva

# Thevara Goshti - Mahasivaratri Festival

## KALAHASTI

Conducted according to the orders of His Holiness
Sila Sri Kasivasi Muthukumaraswami Thambiran Swamigal Avergal
Head of Sri Kasi Mutt, Tirupanandal (Thanjavur Dt.)

From 19—2—82 to 24—2—82

The Siva Shrine at Kalahasti is one of the shrines sanctified by the Hymns improvised by the three Great Saiva Saints — Thirugnanasambandar, Thirunavukkarasar and Sundarar A spider, a cobra and an elephant attained salvation by worshipping the Lord and hence the Kshetra got the name Sri Kalahasti. It is one of the Pancha Bhoota Kshetras — Vayulinga where Kannappa Nayanar attained beatitude in six days. In such a famous Kshetra a Thevara Goshti will be conducted for six days from 19—2—82 to 24—2—82 during the Mahasivaratri Festival of Sri Kalahastiswaraswami Devasthanam at Kalahasti and the names of the Thevara Hymnists are given below:-

1. Thiru. RETHINAM PILLAI, Chidambaram
2. Thevaramani Thiru. A. SATTAYAPPAN Chidambaram.
3. Thevaramani Thiru. CHOCKALINGA OTHUVAR, Kalahasti.
4. Sangeetha Bhooshanam Thiru. S. A. GOPLAN, Flute, Thirupanandal.
5. Sangeetha Bhooshanam Thiru. P. SIVA VADIVELU PILLAI Mirudangam, Sivapuri.

MAY SIVA BLESS ALL

B. SUBBA REDDY B.A.,
Asst, Commr Executive Officer
Sri Kalahastiswaraswami Devasthanam,
KALAHASTI
(Andra Pradesh)

K. SUBRAMANYAIYER B.A.,
"Thiagara Vilasam"
62, Pillaiyar koil street,
Triplicane P. O.
MADRAS-600 005.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச் சுவை

திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடம் அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய பண்டார மும்மணிக்கோவையின் 17 ஆவது பாடல் ஒரு நேரிசை ஆசிரியப்பா ஆகும். 44 அடிகளைக் கொண்ட இப்பாடலின் முதல் 21 அடிகள் திருவாரூரை வருணிக்கின்றன.

திருவாரூரில் மிக உயர்ந்த மாளிகைகள் இருக்கின்றன. அவற்றிலே அழகிய பெண்கள் யாழ் வாசிக்கிறார்கள். அந்தப் பெண்களின் முகத்தைப் பார்த்து ஆண்கள் உருகுவது போல மழை பொழிகிறது. மழை வளம் பெருகியதால் பிற எல்லா வளங்களும் நிறைந்ததாகத் திருவாரூர் விளங்குகிறது — இந்தக் கருத்துக்களே அந்த 21 அடிகளின் சாராம்சம் ஆகும்.

பொன் மாடத்தில் அமர்ந்து யாழ் வாசிக்கும் அழகிகளை முதலில் வருணிக்கிறார்கள். அவர்களின் மார்புகள் வருணிக்கப் பெறுகின்றன. பெண்களை வருணிப்பது

சுவாமிகளின் நோக்கமன்று. வரலாறு, புராணம், மரபு ஆகிய வகைகளில் வகைக்கொன்று வீதம் மூன்றுஉவமைகள் சொல்லுவதே உள்நோக்கம்.

1. வரலாறு: தமிழ் நிலத்தை ஆண்ட மூவேந்தருள் முதல் வேந்தர் சேரர். சேர மன்னர்கள் அனைவரைப் பற்றி யதுமான விரிவான வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றான பதிற்றுப் பத்து என்னும் இலக்கியம் நமக்குச் சேரர்கள் வரலாற்றை ஒரு வாறு உணரத் துணைபுரிகிறது.

நெடுஞ்சேரலாதன் என்ற சேர மன்னன் ஒருவன் இருந் திருக்கிறான். அவனுக்கு 'இமய வரம்பன்' என்பது சிறப்புப் பெயர். இவன் இமயம் வரை படையெடுத்துச் சென்று, எதிர்ப்பட்ட மன்னர்களையெல்லாம் வென்று அந்த வெற்றிக்கு அடையாளமாக இமய மலையில் தன்இலச்சினை யும் (முத்திரை) கொடியும் ஆகிய வில்லின் அடையாளம் பொறித்து மீண்டான். இது வரலாறு கூறும் உண்மை.

பழைய மன்னர்கள் ஒரு மலையையோ கடலையோ எல்லை யாகக் கொண்டு நாடாட்சியை வகுத்துக் கொள்வார்கள். போரிட்டு வென்று மலையெல்லையில் தம் இலச்சினையைப் பொறிப்பார்கள்.

பெண்களை மன்மதன் வென்றான். தன் இலச்சினை யாகிய கரும்பு வில்லை அவர்கள் மார்பில் பொறித்தான். அதாவது மகளிர் தம் மார்புகளில் சாத்தினால் கரும்புபோல் ஓவியம் தீட்டி அழகு செய்து கொண்டார்கள்.

போந்தைஅம் கண்ணி வேந்து, வில்பொறித்த
மன்பெரும் கிரியின் மென்கரும்பு எழுதி

[போந்தை-பனம்பூ. கண்ணி-மாலை; சேரர்களின் அடையாள மாலை; பனம் பூ மாலை. வேந்து - அரசர் - சேரர்; பொறித்த - பதித்த; மன் - நிலைபெற்ற; கிரி - மலை]

2. புராணம்: தேவர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலைக் கடைந்தார்கள் என்பது ஒரு புராண வரலாறு. அப்பொழுது மகாமேருமலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைக் கயறு ஆகவும் கொண்டார்கள். மகாமேரு மலையைப் பொன் மலை என்பது வழக்கம்.

பெண்கள் மார்பிலே கச்சுக் கட்டியிருந்தார்கள். அது மகாமேரு மலைக்கு வாசுகி என்னும் பாம்பைச் சுற்றியது போல் இருந்தது. பாம்பிலும் மணி உண்டு; கச்சிலும் மணி உண்டு.

தேசுஉலாம் பசும்பொன் சிகர,மந் தரத்தின்
வாசுகி பிணித்தென மணிக்கச்சு இறுக்கி

[தேசு — ஒளி; சிகரம் — உச்சி; மந்தரம் — மலை; வாசுகி — ஒருபெரும் பாம்பு; பிணைத்து — சுற்றிக்கட்டி;]

3. மரபு: யானைக்கு முகபடாம் போர்த்துவார்கள். யானை யுத்தத்திற்குப் போகும்போதுதான் இப்படி முகபடாம் போர்த்துவது வழக்கம். இது ஒரு மரபு. அது அதன் தற்காப்புக்காக.

பெண்கள் மார்பிலே கச்சுக் கட்டிக் கொண்டு அதன் மேலே துகில் போர்த்துகிறார்கள். எப்பொழுதுமன்று. யுத்தத்திற்குப் புறப்படும் யானைக்கு முகபடாம் போர்த்து வது போல, பிறர் காணும் போது மட்டிலுமே. அது யானையின் தற்காப்புக்கு அமைவது போல, இதுவும் இவர்களின் தற்காப்புக்கே. 'தற்காத்து' என்பதுதானே பெண்களுக்கு வள்ளுவன் வகுக்கும் முதல் கடமை!

கடாம்பொழி கரடக் களிநல் யானை
படாம்புனைந்து என்னப் பைந்துகில் போர்த்து

[கடாம்-மதநீர்; கரடம்-மதம் பொழி சுவடு; கடாம் என்பதற்கும் கரடம் என்பதற்கும் யானை மதம் என்பதே பொருள். இரு சொற்களும் ஒரு தொடரில் வந்தமையால் இங்கு கரடம் என்பதன் இரண்டாம் பொருளாகிய 'மதம் பொழி சுவடு' என்பது கொள்ளப்பட்டது. படாம்; முக படாம்; பைந்துகில்-மெல்லாடை]

இந்த மூன்று உவமைகளால் பெண்களின் எழிலை வருணித்து அதன்பின் அவர்கள் யாழ் வாசிப்பது பற்றிக் கூறுகிறார்.

தேவலோகத்துப் பெண்களை விட இவர்கள் ஆற்றல் மிக்கவர்கள். எனவே தேவர்களின் கண்கள் இவர்களைக் கவ்வுகின்றன.

பெரிய மாளிகைகளில் இவர்கள் உள்ளார்கள். அம் மாளிகைகளில் பல சூளிகைகள் - அதாவது அறைகள் உள்ளன. இந்த உயரமான மாளிகைகளைப் பார்க்க வேண்டுமென்றால் கழுத்திலே கைகளைக் கோத்துக் கொண்டு அண்ணாந்துதான் பார்க்க வேண்டும், இந்த மாளிகைகள் புதிய மாளிகைகள்

இந்த மாளிகையின் உச்சியில் அறையில் அமர்ந்து கொண்டு பெண்கள் யாழ் வாசிக்கிறார்கள். அவர்கள் கைகளில் தங்க வளையல்கள்.

முதலில் யாழை எடுத்து மார்போடு அணைத்துக் கொள்கிறார்கள் மாடகம் எனப்படும் முறுக்காணியைத் திருகுகிறார்கள். இதற்குச் சுருதி சேர்க்கிறார்கள் என்பதுபொருள். உச்சம், மெலிவு,சமம் என்ற மூன்று ஸ்தாயிகளுக்கும் சுருதி

பார்த்துக் கொள்ளுகிறார்கள். வாசிக்கப் போகும் இராகத்திற்கு உரிய ஏழு சுரங்களாகவும் ஆரோகண அவரோகணமாக ஒரு முறை வாசித்துப் பார்க்கிறார்கள். ஏனென்றால் ராகத்தில் இல்லாத சுரம் பேசக் கூடாது. அது மகாபாபம். இக்குற்றத்தை 'அபஸ்வரம்' என்று சங்கீதம் தெரிந்தவர்கள் சொல்வார்கள். மென்மையான விரல் நகங்களினால் யாழை மீட்டுகிறார்கள். பாடல் ஒலிக்கத் தொடங்கியது. கொவ்வைப் பழம் போன்ற வாயைத் திறந்து குயில் குரலால் இவர்களும் உடன் பாடத் தலைப்பட்டார்கள்.

தேவ கணங்கள் 18. அதில் சங்கீதம் வல்லவர்கள் கின்னரர்கள். அவர்களும் இந்த இசை கேட்டு வியந்தார்கள்.

இப்படி வாசித்துக் கொண்டே பாடல் பாடும் போது அவர்கள் முகம் கோணலாகவில்லை. கோணலானால் அதனை 'அங்க சேஷ்டை' என்று குற்றமாகச் சங்கீதக்காரர்கள் சொல்வார்கள்.

இப்படிப் பாட்டுப் பாடி யாழ் வாசிக்கும் பெண்களைப் பார்க்கும் ஆடவர்கள் உருகுவார்களோ அப்படி சந்திர காந்தக்கல் உருகி மழைபோல ஆனந்தக்கண்ணீர் விட்டது. அதனால் ஆரூர் வளம் செறிந்ததாக விளங்கியது. இக்கருத்துக்கள் அடங்கிய பாடற் பகுதி வருமாறு:

பிதிர்சுணங்கு அலர்ந்த கதிர்முலை மடந்தையர்
விண்புலத் தவர்க்கும் கண்புலன் கதுவாச்
சூளிகை வகுத்த மாளிகை வைப்பில்
சேண்இகந்து ஓங்கும் யாணர்செய் குன்றத்து
ஆடகத்து இயன்ற சூடகக் கரத்தால்
மாடகம்திவவி யாழ் மருமம்மீது அணைத்து

மூவகை நிலையத்து ஏழுசுரம் நிறீஇக்
கொவ்வைவாய் திறந்து குயிலென மிழற்றுபு
மெல்நரம்பு உகிரான் விரல்முறை தடவிக்
கின்னரம் வியக்கும் கீதம் பாட
நகைநிலவு எறிக்கும் முகமதி காணூஉச்
சந்திர காந்தத்தில் சமைத்தசெய் குன்றம்
மைந்தர்போன்று உருகி மழைக்கண்ணீர் சொரியப்
பல்வளம் சுரக்கும் பைந்தமிழ்க் கமலை

[சுணங்கு-ஒருவகைத் தேமல்; கதிர்-ஒளி; விண்புலத்தவர்-தேவர்; கதுவா-கவ்வ; சூளிகை-அறை; வைப்பு-இடம்; சேண் - தூரம்; இகந்து - கடந்து; யாணர் - புதிய; ஆடகம் - பொன்; சூடகம் - வளையல்; மாடகம் - திருகாணி; திவவி - முறுக்கி; மருமம் - மார்பு; மூவகைநிலையம் - உச்சம், மெலிவு, மத்திமம் என்ற மூன்று ஸ்தாயிகள்; கொவ்வை - கோவை; மிழற்றுபு - ஒலித்துக் கொண்டு; உகிர் - நகம்; கின்னரம் - கணங்களுள் ஒருவர்; ஒரு பறவை;

சந்திரகாந்தம்-இது ஒருகல். சந்திரனைக் கண்டால் நீர் சுரக்கும்; பெண்களின் முகத்தைச் சந்திரனாக எண்ணி நீர் சுரந்தது என்றபடி].

— சிவ சிவ



# 52. முழுமுதற் பொருளைத் திருடுதல்

தமிழாக்கம் - கோ. வன்மீகநாதன்

உலகத்தின் ஆரம்பம் ஒன்றிருந்தது,
அதை உலகத்தின் தாயாகக் கருதலாம்.
தாயிலிருந்து அவளுடைய மகன்களை அறியலாம்.
மகன்களைத் தெரிந்து கொண்டபின்
தாயுடன் ஒன்றியிரு.
இவ்வண்ணம் ஒருவருடைய வாழ்க்கை
தீங்கிலிருந்து காப்பாற்றப் படலாம்.

அதன் துளைகளை அடையுங்கள்,
அதன் கதவுகளைச் சாத்துங்கள்,
(அப்படிச் செய்தால்) ஒருவனுடைய வாழ்க்கை
பாடுபடுதலில்லாமலிருக்கும்;

அதன் துளைகளைத் திறந்து விடுங்கள்,
அதன் காரியங்களில் மும்முரமாயிருங்கள்,
(உடனே) ஒருவனுடைய வாழ்க்கை உய்வதற்கு வழியின்றிப்
போய்விடும்.

எவனொருவனால் சிறியதைக் காண முடியுமோ
அவன் தெளிவான பார்வையுள்ளவன்,
எவனொருவன் சாதுவான குணத்தைத் தழுவிநிற்கின்றானோ
அவன் வலியவன்,
ஒளியைப் பயன்படுத்து,
தெளிவான பார்வைக்குத் திரும்பிவா —
இவ்வண்ணம் உனக்குப் பிற்பாடு துயரம் வராமல் காத்துக்
கொள்
— இதுதான் முழுமுதற் பொருளில் ஒன்றியிருப்பது;

# 53. கொள்ளையடித்தல்

எனக்கு மட்டும் துறவற ஞானம் இருந்தால்
நான் ராஜ வீதியில் (டௌ) நடந்து செல்வேன்;
சிறிய குறுக்குப் பாதை வழிச் செல்ல மாட்டேன்.
ராஜவீதி நடப்பதற்குச் சௌகரியமாயிருக்கிறது,
ஆயினும் மக்கள் சிறிய குறுக்குப் பாதைகளை விரும்புகிறார்கள்.

அரசாங்க அலுவலகங்கள் கூட்டித் துடைத்துத்
துப்புரவாக இருக்கின்றன.
ஆனாலோ வயல்கள் உழப்படவில்லை
மக்களுடைய களஞ்சியங்களில்
நெல் மிகவும் அடியில் கிடக்கிறது.
ஆயினும் பூவேலை செய்யப் பட்ட அங்கிகளை அணிந்து கொண்டு
அழகிய வாள்களை ஏந்திக் கொண்டு
நல்ல உணவையும் மதுவையும் திகட்டத்திகட்ட உண்டு விட்டு,

அவர்கள் (அதிகாரிகள்) சொத்து சுதந்திரங்களைப்
பகிர்ந்து கொள்வதில் ஈடுபட்டிருக்கிறார்கள்.
— இதுதான் கொள்ளையடிப்பதற்கு உலகுக்கு வழிகாட்டி.
டௌவை ஒழுக்கக் கேட்டுக்கு ஆளாக்கியதல்லவா?

---

நம் நாட்டின் மாநிலங்களில் இன்று நிகழ்வதும்
இதுதானே.

# பிச்சைத் தேவர் (கபாலீசுவரர்)

ந. ரா. முருகவேள், M. A., M. O. L.

சிவபெருமான் தன்னை வழிபடும் அன்பர்களுக்கு அருள்புரிதற் பொருட்டு, அவ்வப்போது மேற்கொண்ட அருளுருவத் திருமேனிகள் 25 என்றும், 64 என்றும் நூல்கள் நுவலும். அவற்றுள் ''பிட்சாடன மூர்த்தம்'' என்பதும் ஒன்றாகும். இதனை மணிவாசகர் ''பிச்சைத் தேவர்'' என வழங்குவர். ''ஆரூர்எம் பிச்சைத் தேவா! என் நான் செய்கேன்? பேசாயே!'' (185) என்பது, திருவாசகம்.

பிட்சாடன மூர்த்தம், ஆடையின்றி வெற்றரையாக இருக்கும். அதன் இடக்கையில் பிச்சைப்பாத்திரமும், வலக்கையில் தமருகம் அல்லது சூலமும் அமைந்திருக்கும். இடக்கால் தரையில் ஊன்றி யிருக்கும். வலக்கால் நடப்பதற்கு அடையாளமாகச் சற்று வளைந்து தளர்ந்திருக்கும். தலையில் சடாபாரம் (Dishevelled), அல்லது சடாமண்டலம் (Arranged as a circle) இருக்கக் காணலாம். இடுப்பில் பாம்பு ஒன்று சுற்றியிருந்து அணி செய்யும். 'அற்றம் மறைப்பது முன் பணியே' என்பது சம்பந்தர் திருமொழி. அதன்படி, அப்பாம்பே அற்றம் (மறைவிடம்) தோன்றாதபடி மறைத்து அழகு செய்து கொண்டு விளங்கும். நெற்றியிற் பட்டம் திகழும். திரி நேத்திரம் நீலகண்டம் முதலிய சிறப்பியல்புகள் இதற்கு உண்டு. வலக்காலில் வீரக்கழல் வயங்கும். மார்பில் உபவீதம் இருக்கும். திருவடிகளை வேதப்பாதுகைகள் தாங்கும். இவர் கபாலம் (பிரமனின் தலை ஓடு) ஏந்தியிருப்பார். அதனால் இவருக்குக் கபாலி என்றும் ஒரு பெயர் வழங்கும். கபாலம் ஆகிய பிச்சைக்கலம் ஏந்திய இடக்கை, உந்தி (கொப்பூழ்) வரையில் உயர்ந்தொளிரும். தமருகம் (உடுக்கை) தாங்கிய வலக்கை, காதுவரையில் நீண்டு ஓங்கிச் சென்றிருக்கும். கபாலம் ஏந்திய இடக்கை கடகமுத்திரை நிலையில் அமைந்து நிற்கும். வலப்பக்கம் ஒரு மானும், இடப்பக்கம் ஒரு குறட்பூதமும், பிச்சைத் தேவரின் சிற்பங்களில் அமைந்திருக்கக் காணலாம்.

சிவபெருமான், தான் ஓர் ஒப்புயர்வற்ற பெருஞ் செல்வனும் வள்ளலுமாக இருந்த போதிலும், ஒரு வகையில் தான் மிகப்பெரிய.

பிச்சைக்காரனுக இருத்தலேயே பெரிதும் விரும்புகின்ருன்: அவன் நம்மிடம் அன்புப்பிச்சை பெறுவதற்கு விழைகின்ருன். நம்முடைய உள்ளக்கதவுகள் திறக்குமா? என்று ஏக்கற்று எதிர் நோக்கிக் காத்து நிற்கின்ருன். நமது இருதயத்தின் தலைவாயிலுக்கு வந்து, உள்ளே நுழைய முயலுகின்ருன். நமது இருதயமாகிய குகையின் வாயில் திறந்ததும் அதனைத் தூய்மைசெய்து, அதன்கண் தனது அருள் ஒளியைப் பரப்பி, நலம் செய்யத் துடிக்கின்ருன். நம்முடைய துன்பப் பொதிகளையும், வினைச்சுமைகளையும், தன்னிடம் தந்து விட்டுக் கவலையற்று, நாம் நலமாக இருக்கும் வண்ணம், நம்மை நாடிப் போந்து, நம்மிடம் அவன் இரந்து எளிவந்து நிற்கின்ருன் நாம் அவனைப் பொருட்படுத்தாமற் புறக்கணித்தாலும், நம்மை அவன் பொருட்படுத்தி, நம்மைப் புறக்கணிக்காமலும் கைவிடாமலும் காப்பாற்றி அருள்புரிகின்ருன். நமக்கு நலஞ்செய்யும் அவனது முயற்சியில், தன்னேடு இணைந்து இயைந்து ஒத்துழைக்குமாறு நம்மை அவன் நயந்தினிது வேண்டிக் கொள்கின்ருன். ''ஏற்பது இகழ்ச்சி'' என்பது உலகியலில் உண்மையாகலாமாயினும், தன்னலமற்ற தூய நல்ல சான்ருண்மைப் பெருநிலையில் அதுவே மிகப் பெரிய சிறப்புடையதாகத் திகழ்தலைபே, பிச்சைத் தேவர் எனப் பெறும் சிவபிரானின் திருவுநவம் தெள்ளிதின் விளக்குகின்றது.

''குண்டு முற்றிக் கூறை இன்றியே
பிண்டம் உண்ணும் பிராந்தர் சொற்கொளேல்
வண்டு பாட மலர் ஆர் திருப்புன்கூர்க்
கண்டு தொழுமின் கபாலி வேடமே''

— சம்பந்தர்.

---

''Hindu mythology looks upon god as an eternal beggar waiting for the opening of the door that he may enter into the darkness and illumine the whole horizon of our being as with a lightning flash. It is not so much man seeking God as god seeking man. He goes out into the dangers of the wilderness to lead us out of it. God so loves the world that he gives himself to it. He expe its us to look upon him as our friend, lover and comrade. He is for ever saving the world''.

—Dr. S. Radhakrishnan.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர். 1

துன்மதி ஞ தை மீ (1982 ஜனவரி — பிப்ரவரி)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலப்வ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (14—1—82) | வியாழன் | பஞ்சமி 15-35 | பூரம் 8-57 பொங்கல் |
| 2 | (15—1—82) | வெள்ளி | சஷ்டி 15-45 | உத்திரம் 9-29 மாட்டுப் பொங்கல் திருவள்ளுவர் நாள் |
| 3 | (16—1—82) | சனி | சப்தமி 16-43 | அஸ்தம் 10-48 கரிநாள் |
| 4 | (17—1—82) | ஞாயிறு | அஷ்டமி 18-22 | சித்திரை 12-48 உழவர் திருநாள் |
| 5 | (18—1—82) | திங்கள் | நவமி 20-35 | சுவாதி 15-21 |
| 6 | (19—1—82) | செவ்வாய் | தசமி 23-08 | விசாகம் 18-17 |
| 7 | (20—1—82) | புதன் | ஏகாதசி 25-49 | அனுஷம் 21-22 |
| 8 | (21—1—82) | வியாழன் | துவாதசி 28-26 | கேட்டை 24-26 |
| 9 | (22—1—82) | வெள்ளி | திரயோதசி நாள்முழுதும் | மூலம் 27-17 |
| 10 | (23—1—82) | சனி | ,, 6-49 | பூராடம் 29-48 |
| 11 | (24—1—82) | ஞாயிறு | சதுர்த்தசி 8-51 | உத்திராடம் நாள்முழுதும் |
| 12 | (25—1—82) | திங்கள் | ●அமாவாசை 10-26 | ,, 7-56 |
| 13 | (26-1—82) | செவ்வாய் | பிரதமை 11-33 | திருஓணம் 9-36 |
| 14 | (27—1-82) | புதன் | துவிதியை 12-12 | அவிட்டம் 10-50 |
| 15 | (28—1—82) | வியாழன் | திரிதியை 12-23 | சதயம் 11-36 |
| 16 | (29—1—82) | வெள்ளி | சதுர்த்தி 12-07 | பூரட்டாதி 11-56 |
| 17 | (30—1—82) | சனி | பஞ்சமி 11-25 | உத்திரட்டாதி 11-52 |
| 18 | (31—1—82) | ஞாயிறு | சஷ்டி 10-19 | ரேவதி 11-24 |
| 19 | ( 1—2—82 ) | திங்கள் | சப்தமி 8-50 | அசுவனி 10-33 |
| 20 | ( 2—2—82 ) | செவ்வாய் | அஷ்டமி 7-00 }<br>நவமி 28-52 } | பரணி 9-22 |
| 21 | ( 3—2—82 ) | புதன் | தசமி 26-27 | கார்த்திகை 7-53 |
| 22 | ( 4—2—82 ) | வியாழன் | ஏகாதசி 23-51 | மிருகசீரிஷம் 28-15 |
| 23 | ( 5—2—82 ) | வெள்ளி | துவாதசி 21-09 | திருஆதிரை 26-14 |
| 24 | ( 6—2—82 ) | சனி | திரயோதசி 18-26 | புனர்பூசம் 24-15 |
| 25 | ( 7—2—82 ) | ஞாயிறு | சதுர்த்தசி 15-50 | பூசம் 22-25 பூசம் |
| 26 | ( 8—2—82 ) | திங்கள் | ○பௌர்ணமி 13-27 | ஆயில்யம் 20-51 |
| 27 | ( 9—2—82 ) | செவ்வாய் | பிரதமை 11-27 | மகம் 19-42 |
| 28 | (10—2—82) | புதன் | துவிதியை 9-57 | பூரம் 19-04 |
| 29 | (11—2—82) | வியாழன் | திருதியை 9-03 | உத்திரம் 19-05 |
| 30 | (12—2—82) | வெள்ளி | சதுர்த்தி 8-53 | அஸ்தம் 19-50 |

1982 ஜனவரி

பிப்ரவரி

# விடையரங்கம்

விஞ: "உயிர்கள் பல; இவை அனைத்தும் பக்குவமடைந்து இறைவனடியைச் சார்கின்றன" என்பது சைவசித்தாந்த உண்மையாயின், ஒருநாள் உயிர்களே இல்லாமற் போய்விடுமா?

புலவர்மணி, வித்துவான்,
மு. ரெத்தின தேசிகர், திருவாரூர்.

மகாவித்துவான்,
ச. தண்டபாணி தேசிகர்,
மதுரை.

விடை:— உயிர்கள் 'ஊர்வ பதினொன்றும்' என்ற பாடலால் வரையறுக்கப்படுவன 84 லட்சம் யோனி பேதங்கள்.

யோனி பேதங்கள் என்றால் பிறப்புறுப்பு வேறுபாடுகள்; ஒவ்வொரு யோனியிலும் வெளிவருவன இத்துணைய என்ற வரையறை இல்லை. அதுவே எல்லையில்லாதன.

முத்திபெறுவன மக்கள் உயிர்களே; தேவர்களாயினும் போகவினை முற்றியபின் கன்மபூமியில் வந்து மக்களாகப் பிறந்து பதிஞானத்தால் முத்தி பெறுகின்றனர் என்பது சைவ நூற்றுணிபு.

மக்களின் யோனி பேதங்கள் ஒன்பது லட்சம். அவை ஒவ்வொன்றிலும் எத்தனையுயிர்கள் மாறிப் பிறக்கும்?

'பல்லூழிக்காலம் பயின்றரனை அருச்சித்தால், நல்லறிவு சற்றே நகும்' ஆகவே ஒருயிர் முத்தியடைய பல்லூழிக்காலம் வேண்டும். அங்ஙனம் மக்கள் உயிர்கள் முத்தியடைய எத்தனையூழி வேண்டப்படும்? எண்ணுக.

புல்முதல் — தேவரீறாக வினைவாய்ப்பாகச் சகடக்கால் போல் மேலுங் கீழுமாகப் பிறந்திறந்து உழலுவதாலும், உயர்வதாலும், தாழ்வதாலும், மாறிப்பிறக்கும் உயிர்கள் எத்தனை? அத்தனையும் மக்களாகப் பிறந்து நல்லறிவு பெற்று முத்தியடையுங்காலம் இத்துணைய என்று அறுதியிட முடியுமா?

இதனடுவில், விஞ்ஞான கலர், பிரளயாகலர், சாமுசித்தரில் இறைவனாணையால் மக்கட்பிறப்பெடுப்பாரும், 'மாதர்பால் மனம் போக்கினை' ஆதலால் கன்ம பூமியிற் பிறந்து வா என்றும் சார்புணர்ந்து சார்புகெட ஒழுகாத் தன்மையாலும் எத்தனையுயிர்கள்

எவ்வப்போது மக்களாகப் பிறக்கின்றனர் என்பதற்கு ஓர் வரையறையை அனுமானத்தாலாவது அறுதியிட முடியுமா?

ஆதலால், உயிர்கள்எண்ணிறந்தன; பேராவின்பப் பெருவாழ்வு பெறுவன சில. ஏனையநிலையின்பம் பெற எத்தனைக்காலம் வேண்டும் என்பதறியக் கூடாமையான் உலகம் சூன்யமாகப்போவதுமில்லை.

நம்முடைய அறிவுக்கு ஓரளவு எட்டியும் ஓரளவு எட்டாத ஒன்றிலேதான் ஐயம் நிகழ்தல்கூடும்.

முழுதும் அறியப்படாத ஒன்றிலே அறியாமை நிகழுமேயன்றி ஐயம் நிகழாது என்பது தருக்க நூற்றுணிபு.

சிவத்திரு மறைமலையடிகள் 1938ம் ஆண்டில் தியாகராசர் வழிபாட்டிற்காக வந்து என் வீட்டில் இருந்தபோது அவர்களுடன் வினவியறிந்தனவும், பின்னர் நூலளவையை இணைத்து எழுந்த அனுமானத்தாற் பெற்றனவும் இவை.

ஆகவே அமைதி விளையுமாக.

சிவ சிவ

## திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

தஞ்சைத் தரணியில் குடந்தைக்கு அண்மையில் உள்ள திருநாகேச்சரம் பாடல் பெற்ற திருத்தலமாகும். இது சேக்கிழார் திருவடி ஞானம் பெற்றதலம்; இப்பதியில் உள்ள அருள்மிகு நாகநாத சுவாமி திருக்கோயில் இராசகோபுரமும், கட்ட கோபுரமும் தெய்வீக சிந்தனையுடைய அன்பர்களின் கூட்டுணர்வின் வழியாக அரசு மானியத்துடன் திருப்பணி செய்யப் பெற்று வருகின்றன. பங்குனித் திங்களில் குடமுழுக்கு நிகழவிருக்கிறது. ஆத்திக அன்பர்கள் இயன்ற அளவில் காணிக்கையளிப்பார்களாக!

அனுப்ப வேண்டிய முகவரி:-

செயல் அலுவலர்,
ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,
திருநாகேச்சரம்.



உ

சிவ சிவ

## 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அருளாணையின் வண்ணம் வெளிவரும்

### சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | (உள்நாடு) | ரூ: | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) | ரூ: | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா) | ரூ: | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின் பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள் பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ: | 60—00 |
| அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

# உயிர்களின் எண்-இறந்த நிலை *

## மு. அருணாசலம்

சமயங்கள் மனம் வாக்குக்கு எட்டாமல், ஆனால் அதே சமயத்தில் சர்வ அந்தர்யாமியாய், சகல வியாபகமாய், எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் ஒரு பொருளை, அதுவே பரம்பொருள் என்று சொல்லி, மேலும் இலக்கணம் கடந்த பொருளுக்கு இலக்கணம் கற்பிக்க முயன்று அப்பொருளுக்கு இலக்கணமும் சொல்லி, அதை அடைவதற்கான மார்க்கத்தையும் அந்த மார்க்கத்திற்கு ஒரு படியாகக் கோயில்வழிபாடு முதலியனவற்றையும், விவரித்துச் சொல்வனவாகும். சமயம் தெய்வத்துக்கு இலக்கணம் கூறும்போது, தான் சொல்வதே முடிவென்று சொல்வதில்லை; தத்துவப் பொருள்களாகப் பலவற்றைச் சொல்லி அவற்றால் உணர்ந்து அடையப்பெறும் பொருள் அப்பரம் பொருள் என்று கூறும். சைவம் அப்பரம் பொருளைச் சிவம் என்றும், வைணவம் அப்பொருளை நாராயணன் என்றும் கூறும்.

சமய தத்துவம் என்பது ஒரு நெடிதுயர்ந்த பல மாடிக் கட்டிடம் போன்றது. தத்துவக் கருத்துக்களைச் சைவ சமயத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்றும், முப்பொருள்கள் என்றும், முப்பொருள் களும் அனாதி நித்தியம் என்றும் பேசிக்கொண்டு போகும். இவை யெல்லாம், மேல் அமைத்துள்ள பல மாடிக் கட்டிடம். கட்டிடத்தைப் பார்ப்பவர் யாரும் கட்டிடத்தின் அஸ்திவாரத்தை ஒருபோதும் சிந்தித்துப் பார்ப்பதில்லை. அது கண்ணில் படவும் இல்லை. உதாரண மாக இராஜராஜ மன்னன் தஞ்சைப் பெருங்கோயில் கட்டியிருக்கிறான். அதன் சிறப்புப் பொருந்திய விமானத்தின் உச்சியில் எண்பது டன் எடையுள்ள ஒரு கல்லைச் சிகரக் கல்லாக, உட் கூடாயுள்ள நான்கு பக்கங்களையும் சேர்த்துப் பிடிக்கவல்ல பிர்மரந்திரக் கல்லாக அமைத் துள்ளான் என்பதையெல்லாம் நாம் காண்கிறோம். இதற்கு நான்கு மைல் தொலைவிலிருந்து மண்ணினால் சாரம் கட்டி அதன் மேலாகக் கல்லைக்கொண்டு வந்து சேர்ப்பித்தான் என்றும் அறிகிறோம்; பேசுகிறோம். இவையெல்லாம் நிலமட்டத்திற்கு மேலே உள்ள

* பேரறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்கள், விடையரங்கப் பகுதி வினாவிற்கு விடைத் தெளிவு செய்வதற்காக எழுதியளித்த கட்டுரை யாகும் இது.

கட்டிடத்தைப்பற்றி; இதுவே கண்ணில்படுவது, ஆராய்ச்சிக்குட் பட்டது. சுமார் கி. பி. 1000ஐ ஒட்டி இராஜராஜன் எழுப்பிய விமானம் இன்றும் வானளாவி நின்று ஸ்ரீபிரகதீசுவரருக்கு நிழல்தந்து கொண்டிருக்கிறது.

ஆனால் இத்தனைக்கும் அஸ்திவாரம் என்ன? அதன் அகலம் நீளம் யாது? அது சுவரால் ஆக்கப்பட்டதா? ஒரு பள்ளமாகக் கற்களைக் கொட்டி நிரப்பப்பட்டதா? அக்கல்லின் பருமன் யாது? அது செங் கல்லா? கருங்கல்லா? கல்லை ஒட்டுவதற்குப் பயன்பட்டது யாது? சேறு? களிமண்ணு இவற்றை ஒருவரும் இன்று வரை ஆராய்ச்சி செய்து பார்த்ததில்லை

ஆனால் இவை மிகவும் உறுதி கொண்டவை என்பதில் எல்லோ ருக்கும் நம்பிக்கை மாத்திரம் அல்ல, நிச்சயமும் உண்டு. ஏனெனில், இவற்றின் மேல் எழுப்பப்பட்ட எத்தனையோ அடுக்குகள் கொண்ட விமானம் – 216 அடி உயரம் உள்ளது - சுமார் ஆயிரம் ஆண்டுகளாக உறுதியாக நிற்கிறது. இந்த உறுதியை நாம் நினைக்கும் தோறும் இதன் அஸ்திவாரமும் போதிய உறுதி உள்ளது என்று முடிவு செய்வதில் எந்த ஐயமும் இல்லை. இன்னும் எத்தனை ஆயிரம் ஆண்டுகளுக்கும் இந்த விமானத்தைத் தாங்கி நிற்கின்ற உறுதி இந்த அஸ்திவாரத் துக்கு உள்ளது என்று நாம் திடமாக எண்ணுகிறோம்.

சமய தத்துவம் இந்தக் கட்டிடம் போன்றது என்று தொடக்கத் தில் குறிப்பிட்டோம். அதற்கும் இதே போன்ற உறுதி உண்டு என்று மனத்தில் நினைக்க வேண்டும். எடுத்துக்காட்டாக முதலில் சங்கர வேதாந்தத்தைக் குறிப்பிடுவோம். அதன் ஒரே கொள்கை ''எல்லாம் பிரம்ம மயம், அந்தப் பிரம்மமே மாயையினால் சேஷ்டிக்கப்பட்டு, காண்கின்ற இத்தனை ரூபங்களாகக் காட்சி அளிக்கிறது. உண்மையில் இப்பொருள்கள் இல்லை. இம்மாயையாகிய படலத்தைக் கிழித்து உட்பொருளை நாம் காணுவோமானால், அப்போது பிரமம் ஒன்றுதான் உள்ளது என்ற உணர்வு ஏற்படும்'' இது சங்கர அத்வைதம். இந்தக் கொள்கையை அடிப்படையாக வைத்து ஆதிசங்கரரும் அவருக்குப் பின் வந்த பல அறிஞர்களும் மிகப் பெரிதான விசாலமான பல கோட் டைகளைக் கட்டியிருக்கிறார்கள். அந்தக் கோட்டைகள் தர்க்கரீதியாக நிலைத்து நிற்பதால், அவற்றுக்கு அடிப்படையாய்க் கொண்ட சங்கர அத்வைதக் கொள்கை உண்மையானதுதான் என்ற உண்மை பிறக் கிறது. இந்த அடிப்படையின் மேல் எழுந்துள்ள வளர்ச்சிகளை எந்தத் தர்க்க வாதமும் அசைக்க முடியாமையால், அடிப்படை உண்மை என்று கொள்ள வேண்டியிருக்கிறது. தர்க்க வாதங்களால் மேல்

வளர்ந்துள்ள கருத்துக்கோவைகளைச் சிதைக்க முடிந்தால் அப்போது அடிப்படை சரியில்லை என்று முடிவு செய்ய நேரும். இக்கருத்துக் கோவைக்குச் சிதைவு இல்லையானமையால் அடிப்படை, உண்மை என்றே கொள்ள வேண்டியிருக்கிறது.

இனி, சைவ சித்தாந்தத்தைப் பார்ப்போம். எல்லாச் சமயங்களைப் போலவே சில அடிப்படைகளின் மேல்தான் சைவ சித்தாந்தமும் வளர்ந்துள்ளது. ''சிவம் அனாதி. நித்தியமானது. சிவத்தைப்போல உயிர்களும் பாசங்களும் அனாதியாக நித்தியமாக உள்ளன. உயிர்கள் இறைவன் அருளைநாடி அதற்கான பக்தி ஞான நெறியில் மேம் பட்டுத் திருவருளால் சிவபோகம் கைகூடி சிவபெருமான் திருவடி நிழலில் பேரானந்தப் பெரு வாழ்வு பெறுகின்றன. இறைவன் சந்நிதி மாத்திரத்தில் உயிருக்கு ஆனந்தம் விளைகிறது. அவ்வானந்தத்தைப் பெற்றுக் கொண்டு உயிரானது நான் என்ற நினைப்பும் இல்லாமல் ஆனந்தம் அனுபவிக்கிறேன் என்ற நினைப்பும் இல்லாமல், இறைவன் அவ்வானந்தத்தை அளிக்கிறான் என்ற நினைப்பும் இல்லாமல் ஆனந்த நிலையில் உள்ளது''. (இந்த நிலையை மாணிக்கவாசகர் 'நினைப்பற நினைந்தேன்' என்ற சொற்களால் உணர்த்துகிறார்.) இது சைவ சித்தாந்த நிலை. இது முடிந்தநிலை.

இந்த நிலைகுறித்து ஒருவர் ஒரு வினா எழுப்புகிறார்; ''உயிர்கள் பல. இவை அனைத்தும் பக்குவமடைந்து இறைவனடியைச் சார்கின்றன என்பது சைவ சித்தாந்த உண்மையாயின், ஒரு நாள் உயிர்களே இல்லாமற் போய் விடுமோ?'' என்பது அவ் வினா. இதற்கு விடை கூறு முன், சைவ சித்தாந்தக் கருத்தைத் தெளிவு செய்து கொள்ள வேண்டும். உயிர்கள் பல என்பது சரியில்லை, அளவற்றவை, எல்லை யற்றவை எண்ணிறந்தவை என்ற சொற்களால்தான் அவைகளைக் குறிப்பிட வேண்டும் ஆங்கிலத்தில் இதை infinite என்ற சொல் வார்கள். இங்குச்சொன்ன ஆங்கிலச்சொல்லை, தமிழ் மரபில் அளவற் றவை என்றெல்லாம் சொன்னபோதிலும் கூடவடமொழியில் இதைக் குறிப்பிடுவதற்கு ஓர் அழகான சொல் உண்டு; அது பூரணம் என்பது. infinite என்பது பூரணம் என்று பொருள். பூரணம். எல்லையில்லாத பொருள் என்னும் போது, அதில் எத்தனை எடுத்தாலும் குறையாது எத்தனை சேர்த்தாலும் கூடாது நாம் பேரெண்ணைக்கோடி என்பதை அறிந்திருக்கிறோம். இருப்பினும், கோடானுகோடி என்பது அளவு பட்ட ஓர் எண்தான். அதாவது நூறு லட்சம். ஆனால் இறைவனை மாணிக்கவாசகர் சொல்லும் போது ''எண்ணிறந்து எல்லை

இலாதானே'' [1]என்று சொல்கிருர். ஆகவே அவன் எண்ணுக்கு அப்பாற்பட்டவன்; அவனைப் போல உயிர்களும், எண் இறந்தவை. உயிர்கள் கோடி அல்ல; கோடானுகோடியுமல்ல, எத்தனை கோடிகள் சொன்னாலும் அத்தனையையும் தொகையால் உயிர்கள் கடந்து நிற்கின்றன, இந்த எண் இறந்த அளவில் பலகோடி உயிர்கள் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டு மலங்கள் நீங்கப்பெற்று, சத்திநிபாதம் நிகழ்ந்து, முத்தி நிலைக்குச் சென்ற பிறகும், மிச்சமுள்ள, அருள் பெற வேண்டிய உயிர்களின் எண்ணிக்கை எண்-இறந்ததுதான். எண்-இறந்த நிலைமாறிவிடவில்லை. ஆகவே உலகில் இறைவன் அருளுக்காக ஏங்கி நிற்கின்ற உயிர்களின் எண்ணிக்கை எண்-இறந்த என்றே அமைக்க. எந்தக்காலத்திலும், ஆதி காலத்திலும், மகரசங்கார காலத்திலும் எண்-இறந்த நிலைதான்.

வடமொழியில் ஓர் உபநிடதமந்திரம் இதைத் தெளிவாக உணர்த்தும்.

ஓம் பூர்ண மத: பூர்ண மிதம்
பூர்ணாத் பூர்ணம் உதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணம் ஆதாய
பூர்ணமேவ அவ சிஷ்யதே

என்பது, சுக்கில யஜுர்வேதத்தில் சொல்லப்படும் சாந்தி மந்திரம். இதன் பொருளாவது: ''ஓம் அதுவும் பூர்ணம், இதுவும் பூர்ணம். அந்தப் பூர்ணத்திலிருந்து இந்தப் பூர்ணம் உதயமாயிற்று. இந்தப் பூர்ணத்திலிருந்து பூர்ணத்தை எடுத்தால் எஞ்சி நிற்பதும் பூர்ணமேயாகும்'' என்பது இந்தமந்திரத்தில் சொற்பொருள். இதன் அத்வைதப் பொருளை இங்கு கருதவேண்டியதில்லை: இப்பொருள் பூர்ணத்தின் நிலையை நன்கு விளக்குகிறது; அதாவது infinite என்று சொல்லும் நிலை இதுவே.

கல்லூரிகளில் மேல் வகுப்புகளில் கணித சாஸ்திர பாடம் படிப்பவர்களுக்கு இந்த infinite பற்றிய பாடம் இருக்கும். இதிலிருந்து எதைக் கழித்தாலும் இதில் எதைச் சேர்த்தாலும் இதை எதனால் பெருக்கினாலும் இதை எதனால் வகுத்தாலும் கிடைப்பது இதே infinite தான். இது கணித சாஸ்திரத்தில் ஓர் அடிப்படை உண்மைச் செய்தி.

---

1. எண்ணிறந்து என்பதை எண்ணிறைந்து என்று அச்சிடுகிருர்கள். இது பிழை; இறைவன் எண்ணைக் கடந்தவன், நிறைந்தவன் மட்டுமல்ல.

உயிர்களின் நிலை இந்த infinite நிலை. அவை எண்-இறந்தவை. ஆகவே எத்தனையுகங்களில் எத்தனை கோடிக்கோடியான உயிர்கள் முத்தி நிலைக்குப் போய் விட்டாலும், மிச்சம் உலகில் பாசங்களால் கட்டுண்டு அவதிப்படும் உயிர்கள் எண்-இறந்தவையாகவே நிற்கும். ஆகவே உயிர்கள் பக்குவம் அடைந்து அடைந்து அடைந்து இறைவன் திருவடியைச் சார்ந்த பின்பு கூட எஞ்சி நிற்பது முதலில் இருந்த அதே நிலையில் எண்-இறந்த உயிர்களாகும். இதுவே சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகளில் ஒன்று. இந்த அடிப்படையின் மேல் எழுப்பப்பட்டுள்ள தத்துவக் கோட்பாடு இன்று உறுதியாய் நிற்கிறது. ஆதலால் இந்த அடிப்படை உறுதியானது என்பது உண்மை. ஒரு நாளும் உயிர்கள் எல்லாம் பக்குவமடைந்து பிரபஞ்சத்தில் ஓர் உயிர்ச்சூனியம் நிகழாது இறைவன் திருவடி நிழலில். உயிர்களுக்கு இட நெருக்கடியும் ஏற்படாது.

இறைவனுடைய ஐந்தொழில் என்றென்றுக்கும் அறுதியாக நடந்து கொண்டிருக்கிறது. நடராஜ தாண்டவம் என்றுவது நிற்குமா? (அணுவில் இருக்கின்ற இயக்கம் என்றுவது நிற்குமா?) தாண்டவம் ஐந்தொழிலுக்காக. ஐந்தொழில்கள் உயிர்களைப்பக்குவப் படுத்தற்காக. ஆகவே, என்றுமே உயிர்கள் எண்-இறந்த உயிர்களாக இருந்து கொண்டேயிருக்கின்றன.

எனவே இங்கு நாம் தெளிவாக மனத்தில் கொள்ள வேண்டியது, உயிர்கள் உலகத்தில் நித்தியமாக இருக்கின்றன, கட்டுண்டு இருக்கின்றன. எவ்வளவு தான் முத்தி நிலை எய்தின போதிலும், பின்னும் பின்னும் கட்டுண்ட உயிர்கள் இறைவன் அருளுக்கு ஏங்கி நிற்கின்றன. இறைவன் அருளாடல் அறுதியாக நிகழ்ந்து கொண்டு இருக்கிறது என்பதே சைவ சமயத்தின் அடிப்படைக் கோட்பாடாகும். இது முற்றிலும் உண்மையும் உறுதியும் உடையது.



# வேண்டாமை வேண்டும்

புலவர். முருகு. சுவாமிநாதன், பி. லிட்., (எம். ஏ.,)

ஸ்ரீ குமரகுருபரர் செந்திலழ கனிடம்,

''பழுத்த தமிழ்ப்புலமை பாலித் தொழுக்கமுடன்
இம்மைப் பிறப்பில் இருவாத வினையகற்றி
மும்மைப் பெருமலங்கள் போசித்துத் -தம்மைவிடுத்
தாயும் பழைய அடியாருடன் கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் -சேய
கடியேற்கும் பூங்கமலக் கால் காட்டி''

ஆட்கொள்ள வேணுமாய்விரும்பி விண்ணப்பிக்கின்றார்.

தில்லையம்பல வாணனைத் தொழுது 'எனக்கு ஒரு வரம் கொடுக்க வேண்டும்; குளிரால் வருந்தும்போது கந்தல் துணிகளால் தைத்த உடையும், படுக்க பாழ்வீட்டின் திண்ணையும், பசிக்கு உப்பில்லாத கூழும மட்டுமே கிடைக்கும்படி அருள வேண்டும்; உன்னடியார் தாள் பணிய வேண்டும்; இவையன்றி எது கேட்டாலும் தராதிருக்க வேண்டும்' என இறைஞ்சுகின்றார்.

வரமொன் றிங்கெனக் கருளல் வேண்டும், அதுவே
பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத் திசைத்த ஒருதுணி யல்லது
பிறிதொன்று கிடையா தாக வறுமனைக்
கடைப்புறத் திண்ணை யல்லது கிடக்கைக்
கிடம்பிறி தில்லையாக கடும்பசிக்
குப்பின் றட்ட புற்கையூ ணல்லது
மற்றோர் உண்டி வாய்விட் டரற்றினும்
ஈகுந ரில்லை யாக................
மெய்த்தவர் குழாத்தொடும் வைக இத்திறம்
பெரும்பத மன்றியான்......... பிறிதொன்
றிரந்தனன் வேண்டினும் ஈந்திடா ததுவே
.........(சிதம். மும்)

எனப்பகர்வது குறிப்பிடத்தக்கது.

இவ்வாற்றான் அருட் செல்வர்கள் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராக - நிஷ்காம்ய வழிபாடாற்றித் தாம் கேட்டுப்

பெறுவனவும் தமக்காகக் கேட்காமல் உலக மக்கட்காக - அவர்களைக் கடைத்தேற்றவே விரும்பிக் கேட்டனர். பல பொருள்களையும் வேண்டிய ஸ்ரீகுமரகுருபரர் இறுதியில் உள்ளம் தூய்மையுற- இறைவனடி எய்த - வேண்டிய படிப்படியான காரணிகளையே (கந்தல் ஆடை, பாழ்மனைத் திண்ணை, உப்பில்லாக் கூழுணவு) விரும்பி வேண்டுவது அவர்களின் தன்னலம் கருதாத் தகைமையை வெளிப்படுக்கும்.

பலரும் பல பொருள்களை விரும்பினும் அவையெல்லாம் நிலைத்தவை யல்ல; என்றும் நிலைத்த இன்பம் பெற வேண்டின் இறைவனைக் கேட்க வேண்டுவதொன்று உள்ளது அது இறைவன் திருவடியைச் சேர்தலாகிய பேறே ஆகும். இதனை முத்தியின்பம், பிறவாநெறி, வீடுபேறு, துறக்கம், மோட்சம் எனப் பலவாறாக மொழிவர். அது கிடைத்து விட்டால் உலகத்தில் அரிதென்று கருதுகின்ற பொருள்களும் அரிதல்ல; அத்துடன் அப்பேறு உலகியல் பேறுகளைப் போல ஏற்றக் குறைவுகள் உடையதன்று; என்றும் நிலைத்தது, என்பதனை ஸ்ரீகுமரகுருபரர்,

வலனுயர் சிறப்பின் புலியூர்க் கிழவநின்
அருள்பெற் றுய்தற் குரியனியானெனின்ற்
பல்லுயிர்த் தொகுதியும் பவக்கட லழுந்த
அல்லல் செய்யும் அவாவெனப் படுமவ்
வறுமையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வம் அளித்தருளெனக்கே' [சி. மும். கோ].

என வேண்டி, அவ்வறிவின் பயனாக இறைவனை அடைந்து விட்டால் அதன் பின் விண்ணுலக வாழ்வும் பெரிதில்லை என்பர்.

மின்பொலி பொன்புனை மன்றிலெம் உயிராம்
விமலன் குஞ்சித கமலங் கும்பிட
வேண்டுவர் வேண்டார்
விண்மிசை யுலகே''. [சி. செ. கோ].

என மொழிவார்.

இறைவன் பாதம் அடைந்து அவ்வின்பத்தில் தோய்தலையே அனைவரும் விரும்புவர்: மீண்டும் பிறந்து அதனால் வரும் இன்ப துன்பங்களில் அழுந்த யாரும் விரும்ப மாட்டார்கள்; மீண்டும் பிறவாது, இறைவன் திருவடி நிழல் அடைவதையே யாரும் விரும்ப வேண்டும்; அவ்வாறு விரும்புவதோடு அதற்குரிய நெறியைக் கடைப் பிடிக்க வேண்டும்; உலகத்து இன்ப துன்பங்களுக்குக் காரணம் உலகப் பொருள்களில் ஆசை வைத்தலே யாகும். ஆசையை நீக்கின் அழியாத இன்பம் தலைப்படும்;

அவ்வாசையை நீக்குதலாகிய செல்வம் உலகத்துச் செல்வங் களிலேயே தலைசிறந்தது என்று மொழிவர் வள்ளுவர்.

வேண்டாமை அன்ன விழுச்
செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில்.
வேண்டுங்கால் வேண்டும்
பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

'அநாதியாகத் தான் பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்களால் துன்ப முற்று வருகின்றமையை உணர்ந் தவனுக்கு ஆசை இன்பத்தின் கண்ணே ஆதலின் பிறவாமையை வேண்டும் என்றும், ஈண்டைச் சிற்றின்பம் கருதி ஒரு பொருளை அவாவின் அது பிறப்பினும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின் அது வேண்டாமை வேண்டவரும் என்றும் கூறினர்' எனப் பரிமேலழகர் வகுத்துள்ள உரைத் திறம் அரியது.



## ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

### நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 8—12—81 வரை கூடுதல் | 13,496—60 |
| 1. | திரு. மாரியமமாள், இக்கனூர் | 5—00 |
| 2. | ,, K. பிரபாகரன், அட்வகேட், சென்னை. | 25—00 |
| 3. | ,, R. M. பாலசுப்பிரமண்யம் பேராவூரணி | 20—00 |
| 4 | ,, கோ. கணேசன் புதுவை | 5—00 |
| 5. | ,, T. V. சங்கரக்குமாரு திருநெல்வேலி | 5—00 |
| 6. | ,, K. M. இராமசாமி கொடுமுடி | 10—00 |
| 7. | ,, தேவாரபாடசாலைமாணவர்கள் கொடுமுடி | 10—00 |
| 8. | ,, A. S. கணேசன் திண்டுக்கல் | 5—00 |
| 9. | ,, தி. சு. மாரிமுத்து திருச்செங்கோடு | 20—00 |
| 10. | ,, S. R. வெங்கட்ராம் அடையாறு சென்னை | 5—00 |
| 11. | ,, துர்க்கா குடில் அப்பு கும்பகோணம் | 5—00 |
| | 31—12—81 வரை கூடுதல் | 13,611—60 |

# ஸ்ரீ குமரகுருபரர் அருளிய மதுரைக் கலம்பகம்☼

## கம்பன் அடிப்பொடி.

கலம்பகம் என்பது பிரபந்தவகை தொண்ணூற்றுறில் ஒன்ருகும்: பல்வேருன செய்யுட்கள், அகம், புறம் என்னும் பொருட் கூறு பாடுகள், வகைவகையான சுவைகள் முதலியன நிரம்பிய கதம்ப அமைப்பே கலம்பகமாகும். கலம்பகத்தில் பதினெட்டு உறுப்புகள் அமையும். அவையே :—

புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்பவையாம்: பாவும், பாவினங் களும், சந்தச் செய்யுள்களும் கலம்பகத்தில் அமையும்.

ஒருபோகு, வெண்பா, கலித்துறை ஆகிய மூன்றும் நூலின் தொடக்கத்தில் அமைதல் வேண்டும். இதை ''முதலுறுப்பு'' என்று வெண்பாப்பாட்டியலும், ''முதற்கலியுறுப்பு'' என்று இலக்கண விளக்கப் பாட்டியலும் கூறும். முதலுறுப்புக்குமுன், கடவுள் வணக்கம், ஆசிரிய வணக்கம், அவையடக்கம் ஆகியன சில கலம்பகங்களிற் காணப் படுகின்றன.

முதலுறுப்பு அல்லாமல், இலக்கண ஆசிரியர்கள், நூலின் அகத்தே வரும் செய்யுள் வகை பற்றியும் கூறுகின்றனர். அவை தாம் :— மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை இவற்றினிடையே வெண்பா, கலித்துறை கலந்துவர அந்தாதித் தொடையாக அமையவேண்டும் என்றும் நூலின் இறுதி முதலொடு மண்டலித்து அமைய வேண்டும் என்றும் கூறுவர்.

தேவர்க்கு 100-ம், முனிவர்க்கு 95-ம், மன்னர்க்கு 90-ம், அமைச்சர் முதலியோர்க்கு 70-ம், வணிகர்க்கு 50-ம், வேளாளர்க்கு

---

☼ திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் நடைபெற்ற கருத்தரங் கத்தின் தலைமையுரை.

30-ம் என்று செய்யுட் தொகைக்கு வரம்பு கட்டியுள்ளனர். ஆனல் இவை அப்படியே எல்லாக் கலம்பகங்களிலும் காணப்பெறவில்லை. கூடியும், குறைந்துமே காணப்பெறுகின்றன. ஆளுடைப்பிள்ளையார் திருக்கலம்பகத்தில் 49 செய்யுட்களே காணப்படுகின்றன. மேலும் இறுதி முதலொடு மண்டலிக்கவுமில்லை.

பதினெட்டு உறுப்புகள் என்ற வரம்பையும் இலக்கியம் படைத்தவர்கள் யாவரும் அப்படியே மேற்கொண்டார்களில்லை. பதினெட்டிற்குக் குறைவாக 8, 12, 16, 17 உறுப்புகளும், பதினெட்டிற்கு அதிகமாக 22, 23, 26 உறுப்புகளும் காணப்பெறுகின்றன. நந்திக் கலம்பகம், தில்லைக் கலம்பகம், ஆளுடைப்பிள்ளையார் திருக்கலம்பகம் முதலியவற்றில் பதினெட்டிற்கும் குறைவான உறுப்புகளே காணப் பெறுகின்றன. திருப்பேரைக் கலம்பகத்தில் 26 உறுப்புகள் உள்ளன. இங்ஙனம் காலந்தோறும் உறுப்புகள் கூடியும் குறைந்தும் வந்துள்ளதைக் காணலாம். அப்படியே பாடல் தொகையும் வேறுபட்டு வருதலைக் காணலாம். திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் மீது பாடப்பட்ட கலம்பகத்தில் 100 செய்யுள்கள் உள. புள்ளிருக்கும் வேளூர்க் கலம்பகத்தில் 101 செய்யுள்கள் உள்ளன. ஸ்ரீ குமரகுருபரர் 102 செய்யுட்களை ஆக்கியுள்ளார். எனவே இவ்வரையறைகள் எங்கும் ஒருபடித்தாய் அமையவில்லை என்பது தெளிவாகின்றது.

இனிக் கலம்பகம் என்னும் பெயர்க்குக் காரணம் என்ன என்பதைப் பார்க்கலாம். பெயர்க்காரணம் பலவாறாகக் கூறப்பெறுகின்றன. 'கலவை' என்ற பொருளே பொருத்தமாகப் புலப்படுகின்றது. கதம்பம் என்ற சொல்லே, கதம்பகம், ஆகி, கலம்பகம் ஆயிற்று என்று ஒருசாரார் உரைப்பர், நிறம், மணம், உருவம் ஆகியவற்றால் வேறுபட்ட மலர்கள் ஒன்றக் கட்டியதைக் கதம்பம் என்போம். அப்படியே யாப்பு, சந்தம், அளவு முதலியவற்றால் வேறுபட்ட பலவகைச் செய்யுள்கள் விரவி வரல் காரணமாகிக் ''கலம்பகம்'' என்றாயிற்று என்பதே பொருந்தும்.

வேறு சிலர் கலம் + பகம் எனப்பிரித்துக் கலம் என்றால் 12 மரக்கால்; பகம் என்றால் இறைவனின் குணங்கள் 6. [ஐஸ்வர்யம், வீர்யம், புகழ், திரு, ஞானம், வைராக்யம்] இரண்டையும் கூட்டினால் 18 உறுப்புகளைக் கொண்டதென்பது அச்சொல் புலப்படுத்துகின்றது எனக் கூறுகின்றார்கள். கலத்திற்கு மரக்கால் எத்தனை என்பதைப் போல் படி 48 என்று கூறினால் கதி என்னாகும்? இப்படிப் பொருள் கொள்வது எல்லாம் முறையாகாதென்பதைக் கூறவேண்டுவதில்லை.

கலம்பகம் என்ற இந்தவகைப் பிரபந்தம் சுமார் கி. பி. 9ம் நூற்றுண்டு முதலே தோன்றி வளர்ந்து வந்துள்ளதென அறிகிறோம். நமக்குக் கிடைக்கும் கலம்பகங்களில் காலத்தால் முந்தியது நந்திக் கலம்பகமே. அது தெள்ளாற்றெறிந்த நந்திவர்மன் மீது பாடப்பட்டதாகும். அவன் காலம் கி. பி. 825 — 850 ஆகும். இதில் உறுப்புகள் பதின்மூன்றேயுள்ளன. பாடல் தொகையோ (88 + 27)= 115 ஆகும்.

மன்னர் முதலியோர் மீது பாடப்பெற்ற கலம்பகங்களைவிடத் தெய்வங்களின் மீது பாடப்பெற்ற கலம்பகங்களே அதிகம்; அதிலும் விஷ்ணுபரமாகப் பாடப்பெற்றவற்றை விடச் சிவபரமாகப் பாடப்பெற்றவையே அதிகம்! அடியார்கள் மேல் பாடப்பெற்றவை சிலவே.

''கண்பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள்'' என்று பாராட்டப்பெறும் இரட்டையர்கள் பாடியவை ''தில்லைக் கலம்பகம்'', ''திருவாமாத்தூர்க் கலம்பகம்'' ஆகிய இரண்டே! ''அருணைக் கலம்பகம்'' ''புள்ளிருக்கும் வேளூர்க் கலம்பகம்'' ''மதுரைக் கலம்பகம்'' முதலியன சிவபரமான கலம்பகங்களில் சிறந்து விளங்குவன ஆகும். பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடிய ''திருவரங்கக் கலம்பகம்'' வீரராகவமுதலியார் பாடிய ''திருவேங்கடக் கலம்பகம்'' முதலியன விஷ்ணுபரமாகப் பாடிய கலம்பகங்களில் சிறந்தவையாகும். பெஷ்ஷி என்னும் வீரமாமுனிவர் ''திருக்காவலூர்க் கலம்பகம்'' ஒன்றை ஆக்கியுள்ளார். பூண்டி அரங்கநாத முதலியார் பாடிய ''கச்சிக் கலம்பகம்'' வைநாகரம் ராமநாதன் செட்டியார் பாடிய ''மயூரகிரிக்கலம்பகம்'' ஆகியவை பிற்காலக் கலம்பகங்களில் குறிப்பிடத்தக்கவை ஆகும். திருவரங்கக் கலம்பகத்தில் ''மறம்'' எங்ஙனம் சிறப்புமிக்கதோ அங்ஙனமே குன்றக்குடி என்னும் மயூரகிரிக் கலம்பகத்தில் 'களி' சிறப்புடையதாகும்.

இங்ஙனம் 9 ஆம் நூற்றுண்டிலிருந்து 20ஆம் நூற்றுண்டுவரைத் தொடர்ந்து வருவதிலிருந்தே இப்பிரபந்தம் தமிழகத்தில் பெரிதும் மதிக்கப்பெற்று வந்துள்ளதை அறியலாம்.

''கலம்பக உறுப்புகளின் மூலங்கள்''
''மதுரைக் கலம்பகத்தில் சமயக் கருத்துக்கள்''
''மதுரையின் மாண்பு''

என்பனவற்றை விளக்கிப் பயன் சுரக்க அரும்புலமை மிக்க பெரும் பேராசிரியர்கள் மூவர் ஈண்டுப் போந்துள்ளனர். அவர்களின் ஆய்வுரையைக் கேட்டுப் பயன்பெற உங்களைப்போலவே யானும் பெரிதும்

விரும்பிக் காத்திருக்கிறேன். ஆயினும், மதுரைக் கலம்பகத்தைப் பற்றி தலைவன் என்ற முறையில் சிறிதாவது பேசாது விடலாமா ? எனவே ஸ்ரீ குமரகுருபரரின் தமிழ்ப்பற்று எப்படி எல்லாம் மதுரைக் கலம்பகத்திலும் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது என்பதை ஓரளவு உங்களுடன் கண்டு மகிழ்ந்து என்னுரையை நிறைவு செய்து கொள்கிறேன்.

ஸ்ரீ குமரகுருபரர் சிவப்பற்றைப் போலவே தமிழ்ப் பற்றும் மிக்குடையவர் என்பதை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழிலும், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலும் சென்ற ஆண்டுகளில் கண்டு மகிழ்ந்தோம். அங்ஙனமே மதுரைக் கலம்பகத்தில் அப்பெருமானர் தமிழை எப்படி எல்லாம் பாடிப் பரவித்திளைக்கின்ருர் என்பதைக்காண்போம்.

காப்புச் செய்யுளிலேயே தமிழ் தலைகாட்டி விடுகிறது. தொந்திக்கணபதியின் தந்தையான சிவன்மீது பாடப்பெறும் தமிழ்ப்பிரபந்தம் என்பதை

"தொந்தித் தந்திக்குத் தந்தை தமிழ்" என்கிருர்.

தமிழ்க் கடல்; தீந்தமிழின் மழலை, பசுந்தமிழ், தமிழ் மதுரை, மும்மைத்தமிழ் மதுரை, மும்மைத் தமிழ்க்கூடல், தண்டமிழ் நாடன்னீர், தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ் தண்டமிழ்க் கூடல், சங்கத் தமிழ்ச் சொக்கர், பைந்தமிழ்தேர்கூடல், முத்தமிழ் வெற்பு, எழுதா மறையோடும் இசை முத்தமிழ்; சங்கத்தமிழ்க் கூடல், வடகலையல பல கலை யொடும் தமிழ் வளரும் கூடல், பாட்டுக்குருகும் தமிழ்ச் சொக்கநாதர், முச்சங்கம்வளர் கூடல், தெளிதமிழ்க்கூடல்.

"வண்டமிழ்க் கடலின் தண்டுறைச் சங்கமும்
முத்தகம் பயின்று, காவியங் கற்றுச்
சித்திரப் பாட்டியல் தேர்ந்தன செல்லும்
தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூடல்"

"தண்டமிழ் மதுரம் கூட்டுண எழுந்த வேட்கையால்
எனில் இக்கொழி தமிழ்ப் பெருமை யாரறிவார் ?"

"மேதகைய பலகலை போர்த்து அறம்
வளரும் தமிழ்க் கூடல்"

"வடகலை தென்கலை பலகலையும் பொதி
மதுரை வளம் பதியே"

"பெருவளம் சுரந்த விரிதமிழ்க் கடல்"

என்றெல்லாம் வாய் மணக்க வண்டமிழைப் பேசி மகிழ்கின்றூர்.

வளமான, நயமான, விருத்தங்களும், வெண்பாக்களும் நிரம்பிய மதுரைக் கலம்பகத்தில் ஒன்றிரண்டைக் கண்டு விட்டு என் உரையை முடிப்பேன். வளையல் விற்ற திருவிளையாடலை மனத்தில் கொண்டு ஓர் அறுசீர்க் கழிநெடிலடி விருத்தம் அருளுகிறூர் ஸ்ரீ குமரகுருபரர்.

வலங்கொண்ட மழுவுடையீர்! வளை கொண்டு
விற்பீர்போல் மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல்
லாங்கொள்ளை கொள்கின் றீரால்!
பலங்கொண்ட செட்டுமக்குப் பலித்ததுநன்
ருனீர்இப் பாவை மார்க்குப்
பொலங்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ
கொள்வதற்கோ புறப்பட் டீரே?

மற்றெரு செய்யுள்; அது வெண்பா. அதன் அருமையையும் கண்டு மகிழ்வோம்.

காண்தகைய செல்வக் கடம்பவனத்து ஆனந்த
தாண்டவம் செய்து ஆண்டவர்நீர் தாமன்றே—பூண்டடியார்
உள்ளத் திருப்பீர்எம் உள்ளத்தை யும் உமதா
மெள்ளத் திருப்பீர் மிக!

இங்ஙனம் எத்தனை எத்தனையோ அருமைப்பாடுகளை எல்லாம்மதுரைக் கலம்பகத்தில் கண்டு மகிழலாம். அவற்றை எல்லாம் இனி பெரும் பேராசிரியர்களின் மூலம் கேட்டு மகிழ்வோம்.

அன்பால், பத்தியால், மெய்ஞ்ஞானத்தால், சீலத்தால், பன்மொழிப் பயிற்சியால், நற்புலமையால், இன்னும் பல்வேறு சிறப்புக்களால் தமிழகத்தில் பெருமையுடன் பிறங்கும் ஸ்ரீ குமரகுருபரரின் புகழ்பரப்பும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடமும், இம் மடத்திற்கு முற்றிலும் தகுதிவாய்ந்த தலைவராக அமைந்துள்ள ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகளும் எல்லாவகையாலும் சிறப்புற்றோங்கிச் சைவமும் தமிழும் தழைக்கச் செய்ய ஆலவாய்ச் சொக்கன் அருள்புரிய வேண்டி எளியேன் தலைமையுரையை நிறைவு செய்கிறேன்.

# ஞானஉலா

வித்துவான். தா. குருசாமி தேசிகர்

திருக்கயிலாயஞானஉலா அரிதான தமிழ் இலக்கியம். செந்தமிழ்சேர் சேரமன்னர்கள் வளர்த்த செழுந்தமிழ் இலக்கிய வரிசையில் ஞானஉலா மணம் வீசும் மலராகும். சைவத்திருமுறையில் இடம் பெற்ற இவ்வுலா பண்டைப்பெருமக்களால் நன்கு பயிலப்பட்டு வந்துள்ளது. இன்று இவ்வுலாப்பயில்வாரின்றி சைவப்பெருமக்களாலும் ஓதுக்கப்பட்டுள்ளது. காரணம் தோத்திரமாக அமையப் பெருது சிற்றிலக்கியமாக அமையப் பெற்றதே தான்!

சேரமான் பெருமாள்நாயனுர் யோகப்புரவியில் ஏறி, கைலேக்குச் செல்லும் வழியில் பாடியதே இந்நூல். கைலேயில் இறைவன் திருமுன்பு நின்று 'உனையன்பால் திருவுலாப்புறம் பாடினேன்; திருச்செவி சாத்திடப் பெற வேண்டும்'' என்று இறைவன் அனுமதியுடன் சந்நிதியில் விண்ணப்பிக்கப்பட்ட அருள்நூல் இது. இதனைச் சேக்கிழார் 'திருவுலாப்புறம்' என்பர்.

இந்த உலாவின் பெருமையை உணர்ந்த அருணகிரி அடிகளார்,

'ஆதியந்த வுலா ஆசுபாடிய
சேரர் கொங்கு வைகாவூர்'

என்று புகழ்கின்ருர். ஆதியந்தமில்லாதவர் மீது நினைத்தவுடன் பாடிமுடித்த கவி என்று ஒரு பொருளும், உலாவில் ஆதியும் இது, அந்தமும் இது என்று ஞானவரையறை முற்றியதாக மற்ருெரு பொருளும் இதற்குக் கூறப்படும்.

ஞானமே வடிவமாக உடையவன் சிவபெருமான். அவன் தன்மையை உலாவாக வடித்தெடுத்த கவியோகி சேரமான் பெருமாள் நாயனுர் ஞானத்தின் தன்மையை அழகாகக் கிளந்து பேசுகிருர். திருமாலும் நான்முகனும் அடிமுடிதேடிய வரலாற்றைத் தமது நூலில் தோற்றுவாய் செய்கின்ருர்.

இத்தோற்றுவாய் மூலமாக இறைஞானம் எவ்வாறு சித்திக்கும் என்று குறிப்பிடுகிருர். திருமாலும் நான்முகனும் தேர்ந்துணராது மால் கொண்டு நின்றதால் அவ்விறைஞானம் சித்தியாது நின்றது என்று குறிப்பிடுகின்ருர்;

ஞானசம்பந்தர் இறைவன் அழல்வண்ண மாக இருப்பது ஏன் என்று அருளுகின்ருர் :-

'ஞானத்திரளாய் நின்ற பெருமான்' என்று அண்ணுமலைப் பதிகத்தில் அருளுகின்ருர். இந்த ஞானம் கைவர,

'நன்றும் நன்மனம் வைத்திடும்
ஞானமாம்
ஒன்றுனைக் கண்டு கொண்டது
என்உள்ளமே'

என்ற திருமுறை வாக்குப்படி மனமே பயிற்சி பெறவேண்டும்.
நல்வினைப்பயிற்சியால் மனம் ஞானத்தின்பால்தோயத்தோயத் திருவருளில் திளைக்கும், இப் பயிற்சிக்கு முதற்கட்டமாக இவ் வுலா இலக்கியம் சிவபெருமானின் பெருமைகளை விதந்து ஓதுகிறது.

நூலாசிரியரால் எடுத்துக் கொண்ட உலாத் தலைவன் தனக்கு ஒப்புமையற்ற தனித் தலைவன். அத்தலைவன் பிறவாதே தோன்றினுன்; காணுதே காண்பான்; துறவாமலே யாக்கை துறந்தவன்; ஆழாமல் ஆழ்ந்த வன்; அகலாது அகன்றவன்; உயராது ஓங்கினுன்; ஓதாது உணர்ந்தவன்; நுண்ணியவன்; நுணுகாது நுண்ணியவன்; அணுகாது அணுகியவன்;- என்ற வரிகளுக்குச் சொந்தமாக நாயனுர் அமைக்கின்ருர். அவ்வாறு அமைத்த நாயனுர்,

'எவ்வுருவில் யாரொருவர்
உள்குவார் உள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி
அருள் கொடுப்பான்'

என்று முடிக்கின்ருர். திருநாவுக்கரசரும்

'ஆரொருவர் உள்குவார்
உள்ளத்துள்
அவ்வுருவாய் நிற்கின்ற
வடிவுந் தோன்றும்'

என்று அருள்கின்ற பாங்கை மருங்கேவைத்து ஒப்பிட்டுப் பார்க்கலாம். இவ்வொப்புமையால் இறைவன் ஞான உருவினன் என்பது விளங்க வரும். ஞானம் ஈசன்பால் வேண்டும் என்று வற்புறுத்தவே ஞானஉலா தோன்றியது.

இந்த ஞான உலாவில் வர்ணிக்கப்படுகின்ற ஏழுமகளிர்— உயிர்களின் பருவவேறு பாடுகளில் எஞ்ஞான்றும் பதி ஞானத்திலேயே பொலிதல் வேண்டும் என்று சுட்டப்படுகிறது. மகளிர் ஈண்டு ஆன்மாக்கள்.

இறுதியாக ஆன்மாவானது இறைவனையே சரணடைய வேண்டும் என்று நூல் முடிக்கிறது. உயிர்களின் கடைசிப் புகலிடம் அதுவேயாம்.

'கண்ணவனை அல்லாது காணு;
செவி அவனது
எண்ணருஞ்சீர் அல்லது

இசைகொள்ளா—அண்ணல் கழலடி அல்லது கைதொழா' என்று திருவுலா, கண்ணும் செவியும், கரமும் இறைஞானத் தாட்படுத்தும் நிலை பேசப்படு கிறது. இதே நாயனார் தமது அந்தாதியில்

சிந்தனை செய்ய மனம்
அமைத்தேன்
செப்பநா அமைத்தேன்
வந்தனை செய்யத்தலை
அமைத்தேன்
வாய் வாழ்த்த வைத்தேன்-

என்று அருளிச் செய்கின்றார்.

தலைவனாகிய சிவபெருமானின் உலாவைப் பார்த்து ஆராக் காதல் கொள்ளுகின்ற மகளிர் உயிர்கட்கு ஒப்பாவர். அம்மகளிர் எவ்வாறு இறைவனைக் காதலிக் கின்றனரோ அதுபோல உயிர்கள் நாயகன்பால் அன்பு செய்து உய்ய வேண்டும் என்பது உலா வின் குறிக்கோள்.

சிற்றின்பப் பொருள் விளக்கத் தில் பேரின்பப் பொருள் விளக்கம் புலனாம்படி அருளிய அருள் நூலாகிய இது திருக்குறள் இரண்டினை முழுமையாக எடுத்து வைத்துப் பேசுகிறது.

ஞானஉலாவில் பல செய்திகள் கூறப்பட்டுள்ளன. அணி மணிகள் வகைகளும், தேவகணம் இருடி கணம் வகைகளும் விளக்கப் பட்டுள்ளன. தேவர்களின் செயல் முறைகள் விளக்கம் ஆராய்தற்குரியது. பண்வகை கள் – தோற்கருவிகள் – இயக்கும் முறைபற்றி விளக்கம் கூறப் படுகின்றன.

இத்தகைய ஞானஉலா 200 வரிகளையுடையது. அவ்வுலாப் புறம் பதினோராந் திருமுறையில் அடங்கியுள்ளது. சைவமெய்யன் பர்களும் தமது மக்களுக்கு ஒரு முறை கற்றுக்கொடுத்து மெய் ஞானம் வ்ரப்பெற முயல் வாராக!

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

**வாய் வேக்காளம்**

அ) அகத்தி, வல்லாரைக் கீரைகளை, உணவில் அதிகம் உபயோகித்து வர, வாய்வேக்காளம் நீங்கும்.

**திக்கு வாய்க்கு**

ஆ) ஆடாதொடா இலையைக் கஷாயம் வைத்து அதில் திப்பிலி பொடியைத் தூவி, தேன் விட்டுப் பருகினால் திக்கு வாய்சுகுணமாகும்.

**விக்கலுக்கு**

இ) கடுக்காயின் தோலை நன்றாகத் தூள் செய்து தேன் கலந்து அருந்த விக்கல் நிற்கும்.

Dr. N. சடையப்பன். S. M. P.

# தமிழ்நாடு சைவ வேளாளர் சங்கம்

## அம்பல் கிளைத் தொடக்க விழா

**தருமையாதீனம்,**

**மதுரை ஆதீனம்,**

**குன்றக்குடி ஆதீனம்,**

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்,
**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் ஆகியோரின்**

அருளாசியுடனும், அனுமதியுடனும் நடத்தப்படும் இச் சங்கத்தின் அம்பல் கிளை ஆரம்ப விழாவிற்கு, இந்நான்கு ஆதீனங்களும் ஆசிச் செய்திகள் அனுப்பியிருந்தன மேலும் திருப்பனந்தாள் சைவர்கள் சங்கமும், மாயூரம் திரு செல்வகணபதி அவர்களும், காட்டூர் திரு. ராஜசேகரன் அவர்களும் வாழ்த்துச் செய்தி அனுப்பினர்கள்.

திருவிடைமருதூர் சங்கத்தலைவர், திரு. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் இந்நிகழ்ச்சிக்குத் தலைமையேற்று, தலைமை உரை நிகழ்த்துகையில் இச்சங்கத்தின் தோற்றத்தினைப் பற்றியும், வரலாற்றினைப் பற்றியும் விரிவாகப் பேசினர்கள். கும்பகோணம் சங்கத்தின் தலைவர் திரு. N. காங்கேயன் பிள்ளை அவர்கள் சைவ சித்தாந்தத்தைப் பற்றியும், சிதம்பரம் திரு. ராஜகணபதி அவர்கள் சங்க வளர்ச்சியைப் பற்றியும், கீழவயலூர் அருணசலம் பிள்ளை, நாகை சீனிவாச பிள்ளை, மாயூரம் பாலசுப்ரமணியன், குடந்தை சேது. இராமலிங்கம் அம்பல் புலவர் பழனிவேலன் ஆகியோரும் பேசினர்கள். அம்பல் திரு சிதம்பரம் பிள்ளை சங்கத்தின் பெயர்ப் பலகையைத் திறந்துவைத்தார். விழாவிற்கு சைவ அன்பர்கள் திரளாக வந்திருந்தனர்.

கீழ்க்கண்டோர் பொறுப்பாளர்களாக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

தலைவர்:

திரு. சிதம்பரம் பிள்ளை, அம்பல் கொங்கராயநல்லூர்.

துணைத் தலைவர்:

திரு S. ஜோதிராமலிங்கம் பிள்ளை, அம்பல்.

செயலர்:

திரு G. சுவாமிநாத பிள்ளை, அம்பல்.

இணைச்செயலர்:

திரு. புலவர். நா. தண்டபாணி (கோவில் திருமாளம்)

பொருளர்:

திரு. S. இராமலிங்கம் பிள்ளை, அம்பல்.

செயற்குழு உறுப்பினர்கள்:

1. திரு. S. முத்துக்குமாரசாமி பிள்ளை. கோவில் திருமாளம்
2. திரு. சிவப்பிரகாசம் பிள்ளை, அம்பல்.
3. திரு. திருஞானசம்பந்தம் பிள்ளை, அம்பல்.
4. திரு. S. முத்துக்குமாரசாமி பிள்ளை, பொறக்குடி.
5. திரு. நவநீதகோவிந்தராஜன், அம்பல்.





# சைவ சித்தாந்தம்

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி,

S இராமலிங்கம் B. Sc., (Ag) B L.

நாம் இறைவன் திருவடிப்பேற்றை அடைய நமக்குள்ள தடைகள் என்ன என்றும் அவைகளை நீக்கச் சைவ சித்தாந்தம் கூறும் நான்கு வழிகள் என்ன என்றும் பார்த்தோம். அதில் சொல்லப்பட்ட வழிகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு என்று பார்த்தோம். இப்போது மேற்படி நான்கு வழிகளும் என்ன என்று பார்ப்போம். சரியை என்பது கோவில்களைச் சுத்தம் செய்வது, கோயில்களில் கோலமிடுவது, பூமாலை கட்டுதல் என்பது போன்ற உடலால் செய்யும் தொண்டுகள் ஆகும். இது தாச மார்க்கம் அல்லது தாத மார்க்கம் என்று சொல்லப்படும். இதைச் சாலோகம் என்பார்கள்.

சிவஞான சித்தியார் 171 ம் பாட்டில்

"தாதமார்க்கம் சாற்றில்சங் கரன்தன் கோயில்
தலம்அலகிட்டு இலகுதிரு மெழுக்கும் சாத்திப்
போதுகளும் கொய்துபூந் தார்மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதுஇல்திரு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டால்அடியேன் செய்வது
யாதுபணியீர் என்றுபணிந்து அவர்தம் பணியும்
இயற்றுவதுஇச் சரியைசெய்வோர் ஈசன்உலகு இருப்பார்:

மேற் சொன்ன நான்கு மார்க்கங்களில் சரியை பற்றிச் சொல்லுமிடத்துச் சங்கரன் கோயில் தலம் அலகிட்டு, திருமெழுக்கும் சாற்றி, பூக்கள் எடுத்து தார் மாலை கண்ணி முதலிய தொடையல்கள் பலவற்றைச் சிவபெருமானுக்குச் சாத்துமாறு அமைத்து, அவருடைய கீர்த்தியினை வாயார வாழ்த்தி, திருவிளக்குகள் ஏற்றியும்; திருநந்தவனம் வைத்துச் சிவனடியார் திருவேடம் கண்டால், அடியேன் செய்ய வேண்டியது யாது அதனை அருள வேண்டும் என்று வணங்

கிக்சேட்டுப் பணிவிடை செய்வது என்பது சரியையாம். இச்சரியை செய்பவர்கள் ஈசன் உலகு இருப்பர். அதாவது இறைவனது உலகில் இருப்பர். இத்தகைய சரியை நெறியை அதற்கு இலக்கியமாய் ஒழுகிக் காட்டிய நாவுக்கரசாகிய அப்பர் பெருமான்.

''நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
 நித்தலும்எம் பிரானுடைய கோவில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப
 பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
 சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ என்றும்
 ஆரூரா என்றென்றே அலறு நில்லே'' என்றும்,

''பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்த ராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை உள்ளே வைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினு லிடவல் லார்க்குக்
கரும்பினில் கட்டி போலவார் கடவூர் வீரட்ட னுரே''
என்றும்,

''விளக்கினல் பெற்ற இன்பம் மெழுக்கினல் பதிற்றி யாகும்
துளக்கினன் மலர்தொ டுத்தால் தூயவிண் ஏற லாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ஞ்நெறி ஞான மாகும்
அளப்பில கீதஞ் சொன்னூர்க் கடிகள்தாம் அருளு மாறே''
என்றும்

''எவரேனுந் தாமாக இலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டால் உள்கி
உலராதே அவரவரைக் கண்ட போது
உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே'' என்றும்
''ஐயனென் மிடறடைப்புண்டு ஆக்கை விட்டு
 ஆவியார் போவதுமே அகத்தார் சூழ
மையினற் கண்ணெழுதி மாலை சூட்டி
 மயானத்தில் இடுவதன் முன்மதியஞ் சூடும்
ஐயனுக்காளாகி அன்பு மிக்கு

அகங்குழைந்து மெய்யரும்பி அழகன் பாதம்
கையினுல் தொழும்அடியார் நெஞ்சினுள்ளே
கன்றாபூர் நடுதறியைக் காணலாமே'' என்றும்,

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள்,

''அத்தா உனக்கு ஆளாயினேன்''

என்றும் ஈசனுக்கு அடிமையாகி உய்யலாம் என்று தாசமார்க்கத்தைப் பற்றி அருளியுள்ளார்கள். ஸ்ரீ சீகாழி சிற்றம்பல நாடிகள் அருளிய துகளறு போதத்தில்

''எல்லாம் கழற்றி இறைவனோடுங்கலக்க
வல்லார்கள் சொன்ன வழிபலவும்'' என்று

இந்த மார்க்கங்களைக் குறிப்பிடுகிருர்.

அந்த நூலில் சரியை- தாசமார்க்கம்- பற்றிக் கீழ்க் கண்டவாறு அருளுகிருர்.

''தாதமார்க் கம்சாற்றின் சங்கரனுர் இன்புற
பூதி திருவேடம் போற்றியே -நீதியினுல்
பூங்கா வனம்சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காகச் செய்க பரிந்து''
''அலகு திருமெழுக்கிட் டாலயத்தில் அன்பாய்
இலகு திருவிளக்கும் ஏற்றிப் -பலகாலும்
சென்று வணங்கித் திருவுழவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர்''
''கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து நின்ருர்
அவலோகந் தன்னில் அடையார் அடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து''

(சரியை) தாசமார்க்கம் வழி நடந்தால் சிவலோகம் அடைவர். இது சாலோகம் என்று குறிப்பிடப்பட்டது.

திரு மூல தேவநாயனுர் திருமந்திரத்தில்

''நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்
ருயந்திடுங் காலாங்கி கஞ்ச மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்த வைத்துயிரதே'' என்றும் (வளரும்)

# சிவப்பிரகாசம்

## தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி, எம். ஏ , திருப்பனந்தாள்.

இறைவனின் அருளாற்றல் ஐவகைப்படும். பராசத்தி, திரோதான சத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி என்பன. பராசத்தி - பொதுவாகப் பக்குவமுடைய உயிர்களுக்கு அருள் செய்ய வேண்டுமென நிற்பது. இறைவனைப் போன்று யாண்டும் நீக்கமற நிற்றலின் பராசத்தி எனப்பட்டது. திரோதான சத்தி - உயிர்களிடத்துள்ள ஆணவ வலி குன்றுமாறு நுகர்வைக் கொடுத்து நிற்பது. அவ்வாறு நுகருங்கால் அதன்கண் உள்ள குணம் குற்றங்களை அறியாதவாறு இது மறைத்து நிற்கும். திரோதானம் - மறைப்பது. இச்சா சத்தி-சிறப்பாக உயிர்கட்குக் கருணை செய்ய வேண்டுமென நிற்பது. கிரியா சத்தி-வினைக்கீடாக உயிர்கட்கு உடல் கருவி முதலியவற்றை அருளுவது. ஞானசத்தி-உயிர் சிவப்பேற்றினைப் பெறுதற்குரிய வழிகளையெல்லாம் நாடி நிற்பது. இறைவன் வேறு அவனது அருள்வேறு அன்று. எனினும் உயிர் உய்தி பெறுதற்குரிய இறைவனின் அருள் நிலைகளையே இவ்வாறு விதந்து கூறப்படுகின்றது. பரபோகரூபம் தரும் - இன்பவடிவினனாய் நிற்கும் இறைவனின் வேறற நிற்கும் தன்மையை அருளும். விசுத்த - மேலான சுத்தம். அசுத்தம்-தூயதல்லாதது. இவற்றை முறையே சுத்தமாயை அசுத்தமாயை எனக் கூறுவர். இவ்வசுத்தமாயையினின் வேறுபடாய் விளங்கும் பருப்பொருளே பிரகிருதிமாயையாகும். இவற்றை முறையே விந்து மோகினி மான் என்றும் கூறுவர். உபாதானம் - முதற்காரணம். உயர அமைக்கப் பெற்றுக் கீழ்நோக்கி விளங்கும் ஒரு மின் விளக்கின்கீழ் ஒரு உருண்டையான பொருளை வைப்பின் அதன் மேற்பகுதி முழுமையாக ஒளிபெற்றதாக இருக்கும். அதன் சுற்றுப்புறப்பகுதி ஓரளவு ஒளியுடையதாய் இருக்கும். அதன் கீழ்ப்பகுதி முழுமையும் ஒளியற்றதாய் இருக்கும். இதைப் போன்றே மாயை எனப்படும் திரண்ட ஒரு பொருளும் இறைவனின் பேரொளிக்கீழ் விளங்க அதன் மேற்பகுதி முழுமையாக ஒளியுடையதாயும், அதன்

அடிப்பகுதி ஓரளவு ஒளியுடையதாயும், அதன் கீழ்ப்பகுதி ஒளியற்ற தாயும் விளங்குகிறது. இந்நிலையிலேயே சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என அழைக்கப்படுகின்றன.

சுத்த மாயை-சிவபரம் பொருளாகிய கதிரவன் ஒளிக்குநேராக நிற்றலின் முழு விளக்கம் பெற்று இருப்பதாலும், மல கன்மங்கள் விரவாமையாலும் இப்பெயர் பெற்றது. விஞ்ஞானகலர்க்கும், பக்குவராய் விளங்கும் பிரளயாகலர்க்கும் தம் காரியமாகிய விந்துவிலிருந்து தூய உடல் கருவி உலக நுகர்வுகளை உண்டாக்கித்தருவது. ஒடுக்க காலத்தில் விஞ்ஞானகலர்க்கு உரிய இருக்கையாய் விளங்குவது. அசுத்த மாயை - மல கன்மங்களொடு கலந்து நிற்றலின் இப்பெயர் பெற்றது. அறியாமையை விளைவிப்பது. பிரளயாகலர்க்கும் சகலர்க்கும் உரிய நுண்ணுடம்புகளைத் தோற்றுவித்தற்கு உரியது. ஒடுக்க காலத்தில் பிரளயாகலர்க்கு உரிய இருக்கையாய் விளங்குவது. பிரகிருதி மாயை-அசுத்த மாயையின் தூல பரிணாமமே பிரகிருதி மாயையாகும். அசுத்த மாயை விதை போன்றது. அவ்விதை முளைத்தற்குரிய நிலையில் பக்குவப் பட்டுப் பருத்திருப்பது போன்று விளங்குவது இப்பிரகிருதி மாயையாகும். சகலருக்குப் பருவுடல் தோன்றுதற்குக் காரணமாய் இருப்பது. ஒடுக்க காலத்தில் அவர்களுக்கு இருக்கையாய் விளங்குவது.

ஒடுக்ககாலத்தில் முழுமையாக ஆணவ மல நீக்கம் பெறாத உயிர்களுக்கு அவரவர்களின் தகுதிக்கேற்ப இடனளித்து நிற்பது இம்மாயை என்பது இதனால் விளங்கும். மல நீக்கம் பெற இறைவன் மீள இவ்வுலகைத் தோற்றுவிக்குங்கால் இம்மாயையிலிருந்தே அவ்வுயிரினங்களுக்கேற்ற உடல் கருவி முதலியனவற்றை வழங்குவன். மா-ஒடுக்கம். யா-தோற்றம். உலகம் ஒடுங்கித் தோன்றுதற்கு இடனாய் நிற்றலின் மாயை எனப்பட்டது. உயிர் உடல் கருவிகளைப் பெற்று விளங்குங்கால் அதனது அறிவை மயக்குதலின் மாயை எனப்பட்டது என்றலும் ஒன்று.

ஐந்தொழில்களாவன படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்பன. ஞாலம்: ஈண்டு ஆகுபெயராய் உயிர்களைக் குறித்து நின்றது. அரந்தை-துன்பம்: பிறவித் துன்பம்.

# மதுரையில்மகாசிவராத்திரிதேவாரவிழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21-ஆவது அதிபர்
ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம்
நடத்தப் பெறுவது.

துன்மதி ஆண்டு மாசிமீ 10 ஆம் நாள் (22-2-82)
திங்கட்கிழமை

## மாசி மகா சிவராத்திரி

நீல மாமிடற் றால வாயிலான், பால தாயினர் ஞாலம் ஆள்வரே.
ஆட லேற்றினன் கூடலாலவாய், பாடியே மனம் நாடி வாழ்மினே

— சம்பந்தர்

மாகத்து அபரதிர யோதசியோ டேபதினன்கு
ஏகவா ரத்தின் இசையின்,
அற்றை நிசியிற் சிவன்தாள் அர்ச்சிக்கப் பாசவிதம்
அற்(று) அமலன் பாதம் அடைவர் — மாசி

மகா சிவராத்திரி கல்பம்.

திருமுறைவாணர்கள்:

திரு. நா. குருசாமி தேசிகர், மதுரை.
தேவாரமணி திரு. S சைலப்ப ஓதுவார், ஸ்ரீகாசிமடம்
திருமுறைப்பணிமதுரை.
திரு. குமாரசுவாமி ஓதுவார், பழநி.
திரு. மு. கனகசபை பிள்ளை, சிதம்பரம்.
திரு. கலயாண சுந்தர தேசிகர் ஸ்ரீ காசிமடம்
திருமுறைப்பணி, கும்பகோணம்.
திரு. S. L. சாமி. பிடில். திருச்சி.
திரு. தி. சா. தண்டபாணி ஓதுவார் ஸ்ரீ கம்பகரேசுவரர்
தேவஸ்தானம், திருபுவனம்.
திரு கோ. வெங்கட்ராமன், மிருதங்கம்,
திருப்பனந்தாள்.

ஆணைப்படி,
**முத்து. மெய்கண்டதேவன்**
மானேசர், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்

---

குறிப்பு:- மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மன் திருமுன்னிலையில் இரவு 8 மணிக்குத் தொடங்கி சிவமே நிலவும் ஆடி நான்கு வீதிகளில் இரவு முழுதும் திருமுறை வாணர்கள் திருமுறை ஓதிக் காலை 6 மணிக்கு ஸ்ரீ மீனாட்சியம்மன் திருமுன்னிலையில் நிறைவு செய்வார்கள்.

# திருவிளையாடற் புராணம்

## உரை நடை

திருநந்தி தேவர் சிவபெருமானை வணங்கிக் கொண்டு புறத்து வந்து வரகுணபாண்டியனை நோக்கி, ''வழுதி வருக'' என்று அழைத்தார். அப்பொழுது வரகுணன் அவரை வணங்கி எழுந்துபின்செல்லத் திருநந்தி தேவர், ''வரகுணனே! திருமாலும் பிரமனும் வேத முதலிய அளவைகளால் ஆராய்ந்து அறியமுடியாத பேரொளியினை யுடைய ஞான சூரியனாகிய சோமசுந்தரக் கடவுள் ஆண்டருளுகின்ற சிவலோகம் இதுவே; இதனைக்காண்பாயாக'' எனப் பணித்தருளினார்.

**சிவலோகக் காட்சிகள்**

வரகுண பாண்டியன் கண்ட காட்சியை எழுதவும் இயலுமோ? கருப்பூர மணம் கமழும் தென்றற் காற்றினால் மொத்துண்டு, அரும்புக் கூட்டங்கள் மலர்ந்து, பதினாயிரம் யோசனை தூரம் சென்று மணம் வீசி, நூறாயிரம் இதழ்களைக் கொண்ட வெண்டாமரை மலர்கள் விளங்குகின்ற ஓடைகள் பக்கந்தோறும் பொருந்திய ஆறுகளும், தெய்வ மாதர்கள் இனிய வாயினைத் திறந்து தேனைப் பொழிவது போல் பாடும் ஏழிசைகளும், யாழின் இசைகளும், மலர்களில் மொய்க்கும் வண்டுகளின் அழகிய இசைகளும், நாரதரும் தும்புருவும் பாடுகின்ற இனிய இசைகளும் உள்ள எல்லாவிடங்களும், அமுத மயமான நீரினையுடைய வாவிகளும் (நடைக் கிணறுகளும்), பொற்றாமரைத் தடாகங்களும், தேவ மகளிராகிய குயிற் கூட்டங்கள் விளையாடும் பூஞ்சோலைகளும், தேவர்கள் வாழ்கின்ற பதங்களும், பாற்கடல் போன்ற அமுதநீர் நிறைந்த அகழியும், பொன்னாற் செய்த உறுப்புக்கள் அமைந்த திருமதிலும், திருக்கோபுரங்களும், அழகுமிக்க வீதிகளும், நவமணிகள் இழைக்கப்பெற்ற திருமாளிகை வரிசைகளும், அவற்றின் சூளிகை வரிசைகளும், ஐம்புலன்களும் நாடோறும் விருந்தாக உண்ணுதற்கு அமைந்த நால்வகை உண்டிகளும், யாழிசையும், கலவைச் சாந்தும், பொன்மாலையும், ஆடலாகிய செல்வமும், சித்திரப் பாவையையொத்த மகளிரும், நீண்ட சடையையுடைய உருத்திரர்கள் / தங்கள் உருத்திரர் மகளிரோடு அமர்ந்திருக்கும் மாளிகை வரிசைகளும், பகையும் துன்பமும் கடந்த செல்வமும், கவலையின்றித் துய்க்கும் போகங்களும் ஆகிய இவை அனைத்தையும் தனித்தனியே காண்பித்தார்.

இத்தகைய காணற்கரிய காட்சிகளைக் கண்டுகளிக்கும் வரகுண பாண்டியனை நந்தியெம்பெருமான் மேலும் அழைத்துச் சென்று, ''இது நான்முகன் வாழும் பதம் என்றும், இது மூன்றுலகங்களையும்

அளந்த திருமாலின் பதி என்றும், இவை சிவபெருமானின் திருவுருவத்தைப் பெற்ற உருத்திரர்களின் நகரங்கள் என்றும், இவை எட்டுத்திசைகளையும் பாதுகாக்கும் இந்திரன் முதலிய திக்குப் பாலகர்கள் வாழும் இருப்பிடங்கள் என்றும் சுட்டிக் காண்பித்தார்.

பிறகு சிவனடியார் கூட்டத்தைக் கைப்பிரம்பினால் சுட்டி, "இவர்கள், சூரியன் உதிக்கு முன்னே நீராடித் திருவெண்ணீறணிந்து நம் இறைவனுடைய திருக்கோயிலைத் திருவலகிடுதலும், திருமெழுக்கிடுதலும், திருநந்தனவனப் பணி புரிதலும், புட்பங் கொய்து திருமாலை கட்டிக்கொடுத்தலும், சுகந்த தூபமிடுதலும், திருவிளக்கேற்றலும், சிவதோத்திரஞ் செய்தலும், சிவபெருமானின் புகழைக் கேட்டலுமாகிய தொண்டுகளைச் செய்து சிவ சாலோக்கிய பதத்தில் வாழும் தாத மார்க்கத்தினர் ஆவர்."

"இவர்கள் புனிதமுடையவராய்ப் [1]பஞ்சசுத்தி செய்து உள்ளும் புறமும் ஒத்த அன்புடன் சிவலிங்கப்பெருமானைச் சிவாகம விதிப்படி மனமொழி மெய்களின் ஒருமைப்பாட்டுடன் சோடசோபசாரத்தோடு பூசித்துச் சிவ சாமீப்பிய பதத்தில் வாழும் புத்திரமார்க்கத்தினர் ஆவர்."

"இவர்கள், மூலக்கனலை வாயுவினால் எழுப்பி, பிரமரந்திரம் வரையில் கொண்டுபோய், அங்குள்ள சந்திரமண்டலத்தை இளகச் செய்து பிங்கலைக்கும் இடைகலைக்கும் நடுவிலுள்ள சுழுமுனையின் வழியாக ஒழுகும் அமுதத்தை உண்டு சிவபெருமானைப் புருவ நடுவில் தியானித்துச் சிவ சாருப்பிய பதத்தில் வாழும் சக மார்க்கத்தினர் ஆவர்."

"இவர்கள் சிவபெருமான் பொருட்டு வேள்விகளைச் செய்து சிவபதம் அடைந்த அந்தணர்கள் ஆவர். இவர்கள் தண்ணீர்ப்பந்தல் வைத்தல் முதலிய பெரிய புண்ணியங்களைப் புகழும் பயனும் கருதாது நிராசையுடன் செய்தவர்கள். இவர்கள் வேத முறைப்படியும் சிவாகம முறைப்படியும் திருவெண்ணீற்றினை உடலில் அணிந்தவரும், திருவைந்தெழுத்தை உச்சரிக்கின்ற நாவினை உடையவரும், சிவபெருமானின் திருப்புகழைக் கேட்டு வினையின் வலியைப்

---

1. பஞ்ச சுத்தி-பூத சுத்தி, ஆன்ம சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்பன.

போக்குபவரும் ஆவர். இவர்கள் வேதங்களிலுள்ள சதவுருத்திர மந்திரத்தைக் கூறியவரும், உருத்திராட்ச மாலையும், திருநீறும் அணிந்தவர் எவராயினும் அவர்கள் பெயரையும் குணத்தையும் குலத்தையும் கருதாமல், சிவபெருமானைகவே கருதிப் பிறப்பினை ஒழித்தவரும் ஆவர். இவர்கள் சிவஞானத்தைத் தானம் புரிந்த வரும், சிவ தருப்பணம் செய்தவரும், சிவபிரானுக்கு ஆலயம் எடுத்துப்பிரதிட்டை செய்தவருமாய்ப் பிறப்பினை ஒழித்த உத்தமர் ஆவர். இவர்கள் சிவபூசை செய்தவருக்கு வேண்டுங் காரியங்களை விரும்பிச் செய்தவரும், சிவனடியார்களுக்கு அறுசுவை அமுது அளித் தவரும், 'அடியார் பணியைச் செய்தலே தவம்' என்று கருதிச் செய்து மேன்மை அடைந்தவரும் ஆவர். இவர்கள், சோமசுந்தரக் கடவுளுக்குத் திருக்கோயிலும், பிற திருப்பணிகளும், அர்ச்சனைகளும் செய்து, திருநீறு முதலிய சிவசாதன நெறியினல் உலகினைக்காத்துச் சிவபதம் அடைந்த நின் குடியில் தோன்றிய அரசர்கள் ஆவர்'' என்றருளினர்.

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் காட்சி

சிவபெருமான் திருமுன்பு வேதங்களும் சிவாகமங்களும் வடி வெடுத்து இருபக்கங்களிலும் நின்று வாழ்த்தின. தும்புருவும் நார தரும் ஒருபால் நின்று இசை பாடினர். வண்டுகள் ஒலிக்கும் பூங் கொம்புபோலத் தேவ ரம்பையர்கள் ஆடினர். குறை வேண்ட வந்த தேவர்கள் சமயம் பெருது தூரத்தே காத்திருந்தனர். விநாயகக் கடவுளும், கந்தக் கடவுளும், வீரபத்திரக் கடவுளும் வணங்கி நின்று ஏவிய பணிகளைக் கேட்டு ஒருபால் நின்றனர். திருமாலும் நான் முகனும் முன்னுடையினை ஒதுக்கி வாய்பொத்தி ஒதுங்கி நின்று தத்தங் குறைகளைச் சொல்லி நின்றனர். இந்திரன் முதலிய அட்ட திக்குப் பாலகர்கள் தாங்கள் செய்துவருங் காரியக் குறைகளை நடு நடுங்கி விண்ணப்பஞ் செய்து நின்றனர். வளைதடியையும் தண்டத் தையும் ஏந்தி வாயினை மென்று பற்களை அதுக்கிய பூதத் தலைவரும், அளவிறந்த கூற்றுவர்களும், முத்தலைச் சூலமேந்திய சிவகணத் தலைவரும் வாயில்கள்தோறும் காவல் பூண்டு நின்றனர்.

அமரர், சித்தர், அவுணர், சாரணர், கின்னரர், மாதவர், இயக்கர், பாரிடர், கருடர், நாகர், சிவயோகியர் முதலாகிய கணத்தவரெல்லாம் ஒருபால் துதித்து வணங்கி நின்றனர். முனிவர்கள், ''இனி வரும் எங்கள் பிறப்பினை ஒழித்து எங்களைக் காத்தருள்க'' என்று வேண்டி, அருள் நிறைந்த சிவப்பேறமுதினைத் தம் கண்களாகிய வாயால் பருகி, மெய்சிலிர்க்க, ''சங்கர! சிவ! சிவ!''

என முழங்கக் கைகுவித்து வாழ்த்தி நின்றனர். அப்போது அனை வருக்கும் அவரவர் தகுதிக்கேற்ப வேண்டிய வரங்களை அருளிச் செய்து, உமாதேவியார் புன்னகை செய்ய, அளவிறந்த ஒளி வீசும் இரத்தின சிம்மாதனத்தின்மேல் எழுந்தருளியிருந்த சிவபெருமானை வரகுணபாண்டியன கண்டு வணங்கினான்; அப்போது சொற்கள் தடுமாற உரோமஞ் சிலிர்ப்பத் திருவருளாகிய அருட்பெருங்கடலின் கண் தனது அன்பாகிய அலை இல்லாத நதி இழுத்துச் செல்ல, அதனின் மிதந்துசென்று பரமானந்தமாகிய திவ்விய அமிழ்தத்தை உண்டான்.

உரைக ளுந்தடு மாறமெய் யுரோமமுஞ் சிலிர்ப்பக்
கரையி றந்தஇன் னருட்பெருங் கடலில்அன் பென்னுந்
திரையி றந்தஆ(று)சர்த்திட மிதந்துபோய்ச் செப்பின்
வரையி றந்த ஆனந்தஆ ரமுதைவாய் மடுத்தான்.

சிவலோகம் பாண்டியன் கண்களுக்கு மறைதல்

தம் ஐம்புலங்களையும் அந்தக்கரணங்களையும் தன்னுடையனவாகவே செய்து அன்பே வடிவமாகக்கொண்டு நின்ற வரகுணபாண்டியன் எதிரே அருள்வடிவாகிய சிவலோகம், பின்பு முன்புபோல் மதுரையாக மாறியது. சோமசுந்தரக்கடவுள் உமாதேவியாரும் தாமும் முன்னி ருந்தபடியே எழுந்தருளியிருந்தனர்.

வரகுண பாண்டியன் இறைவனைத் துதித்தல்

அரசர்களுக்கரசனாகிய வரகுண பாண்டியன், விண்ணினின்று இழிந்த விமானத்தில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திரு வடிகளைப் பணிந்து திருமுன் நிற்க, அப்போது திருவருட்பெருக்கம் தன்னுட்புகுந்த அளவில் பேரின்பத்திலும் அன்பினும் மூழ்கிக் கண்களினின்றும் ஆனந்த நீர் ததும்ப நாக்குழறத் துதிக்கலானான்; "நாய்போன்ற அடியேனை வருத்தும் கொலைப்பாவத்தினின்றும் அகற்றித் தாய்போன்று தலையளி செய்து ஆட்கொண்டவனே! நின் திருவருளுக்குச் சேய்மையிலுள்ள யானும் கண்டு களிக்கச் சிவ லோகத்தினைக் காண்பித்தருளிப் பின்னர்த் திருக்கோயிலில் அடியேன் எதிரே நின்றருளிய அருட்குன்றே! நின் திருவடிகட்கு வணக்கம்! வினைவழியே சென்று நரகில் ஆழாது அடியேனுக்கு அன்பினை அளித்தவனே! நின் திருவடிகட்கு வணக்கம்! எழுவகைப்பட்டு நால் வகைத் தோற்றமாக வாரா நின்ற பிறவிகள் அனைத்தும் பாழ்பட அடியேனைப் பணிகொண்டவனே! நின் திருவடிகட்கு வணக்கம்! தீவினையேனைக் கொடிய பழியினின்றும் வேறுபடுத்தித் திங்கள் குலத் தவரின் களங்கத்தினைத் தொலைத்தவனே; நின் திருவடிகட்கு

வணக்கம்! அன்புடையவர்களுக்குச் சிவலோகம் உண்டு என்று நூல் கூறுவதை இப்பொழுது அடியேனுக்குக் காட்டி அருளியவனே! நின் திருவடிகட்கு வணக்கம்!'' என்று பலவாறு வரகுண பாண்டியன் துதிசெய்து இனிய திருவருளை முகந்துண்டு, அன்பினால் சோமசுந்தரக் கடவுளுக்குப் பூசை முதலியவற்றை விசேடமாகச் செய்வித்துச் செங்கோலோச்சி வாழ்ந்து வந்தான்.

முனிவர்களின் ஐயம் தெளிவு படலம்

இவ்வாறு கூறியருளிய அகத்திய முனிவரை மற்றைய முனிவர்கள் நோக்கி, "முன்பு சோமசுந்தரக் கடவுள் இந்திரனுடைய சாபத்தையும், மாபாதகம் செய்த அந்தணனுடைய பழியினையும் மதுரையிலேயே போக்கியருளினாரன்றோ! அங்ஙனம் தீர்த்தருளிய பரமன் வரகுணனைப் பிடித்த பிரமகத்தியை மதுரையிலே நீக்காது திருவிடைமருதூரிலே நீக்கியருளியமை என்னை? இதனை எங்களுக்கு ஐயம் தீரும் வண்ணம் கூறியருளுவீராக'' என்று வேண்டினார்கள். அதுகேட்ட அகத்திய முனிவர் அவர்களை நோக்கி, ''முனிவர்களே! சோமசுந்தரக் கடவுள் புண்ணியமூர்த்தி ஆகையால் தமது மதுரைப் பதியில் வசிக்கும் அடியார்கள் வேண்டியபடியே பாதகஞ்செய்து கெட்டுப்போகாது பயந்து நடக்கும்படி திருவுளங்கொண்டே வரகுணனுடைய பழியினைத் திருவிடைமருதூரில் தீர்த்தருளினார்'' என்றார். அப்பொழுது முனிவர்கள் 'நன்று' எனச் சிரமசைத்துச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளை நினைந்து வியந்து பேரானந்தக் கடலில் மூழ்கினார்கள்.

ஒப்பற்ற அம் மதுரை மாநகரம் அன்று முதல் இன்று வரையும் தனக்கொப்பில்லாததாய், எல்லாத் தலங்களுக்கும் ஒரு மணிமுடியாய்த் தேவ உலகத்தினும் வளம்மிக்கதாய்ப் பதினான்கு உலகங்களினும் பூலோக சிவலோகம் என்று கூறப்புகழுடன் விளங்கியது.

செய்யுள்—68

ஆகச் செய்யுள்—2030

---

# 41. விறகு விற்ற படலம்

ஏமநாதன் பாண்டியனால் சிறப்புப் பெறுதல்

வேப்ப மாலையை அணிந்த வரகுண பாண்டியன் இந்திரனைப் போலச் சிறப்புடன் அரசுபுரிந்து வரும் நாளிலே, ஏமநாதன் என்னும் ஒரு யாழ்ப்பாணன் வட நாட்டினின்றும் வந்து வெற்றி விருதுகளோடும் மதுரை நகரை அடைந்தான். அவன், வரகுண பாண்டியனின் அரசவையை அடைந்து பாண்டியனை வணங்கிப் பலவாறு புகழ்ந்து பாராட்டித் தன்யாழினை எடுத்து இடப்பால் தழுவிச் சுருதி கூட்டி, இன்னிசையாகிய தேனை அரசனது அகஞ்செவி நிரம்பி வழியுமாறு பொழிந்தான். இசையினைக் கேட்டு மகிழ்ந்து தலையசைத்த பாண்டியன் ஏமநாதனுக்குப் பல ஆடைகளையும் அணிகலன்களையும் கொடுத்து, உணவுக்கு வேண்டிய பல பொருள்களையும் அளித்துத் தங்குவதற்கு ஒரு பெரிய வீடு காண்பித்துச் சிறப்புச் செய்ய, ஏமநாதன் பெரு மகிழ்ச்சியோடும் தனக்கு அமைத்த வீட்டிற்குச் சென்றான்.

ஏமநாதன் செருக்கைப் பாண்டியன் அறிதல்

பாண்டியன் செய்த வரிசைகளைப் பெற்ற செருக்கினாலும் முன் பல அரசர்களிடம் பெற்ற விருதினாலும் ஏமநாதன் பெருமை மிக்குத் தன்னோடு இசை பாடுதற்கு வல்ல யாழ்ப் புலவர் இங்கு வேறு ஒருவருமில்லை என்று கருதி இறுமாப்புக் கொண்டான். அதனைப் பாண்டியன் அறிந்து ஏவலாளரை விளித்து, ''நமது பாணபத்திரனை அழைத்து வாருங்கள்'' என்று ஏவினான். அவ்வொற்றரால் அழைத்து வரப்பெற்ற பாணபத்திரன் பாண்டியன் அடிகளை வணங்கி அருகு நின்றான். அப்போது பாண்டியன் பாணபத்திரனை நோக்கி, ''நீ இசையில் வல்லவனாகிய ஏமநாதனோடும் பாட வல்லையோ?'' என்று வினவினான். அதற்குப் பாணபத்திரன் வணங்கி நின்று, ''தென்னவர் பெரும! அடியேன் உமது திருவுள்ளக் கருத்தின் வலிமையும், கூடற் பெருமானின் திருவருளும் கூட்டும் முயற்சியால் பாடி அந்த ஏமநாதன் விருதுகளை வாங்கி அவன் செருக்கினையும் ஒழிப்பேன்'' என்று கூறினான். மன்னவன், ''நாளைக்கு வந்து அவனோடு பாடுக; இன்று போகக் கடவை'' என்று காலம் வரையறுத்துக் கூறினான். பாணபத்திரன் வரகுணனை வணங்கித் தன் வீட்டிற்குச் சென்றான்.

பாணபத்திரன் கவலைகொண்டு இறைவனிடம் முறையிடல்

பாணபத்திரன் தன் வீட்டின்கண் சென்று இருக்கும் போது ஏமநாதனிடம் இசை கற்கின்ற மாணவர்கள் கடைவீதி, இரண்டு

தெருக்கள் கூடுமிடம், பலர் கூடும் இடம், மாடவீதிகள் ஆகிய எவ்விடத்தும் சென்று சென்று சொற்கள் மாத்திரை குன்ரு வகையால் இசை பாடிக்கொண்டு வீறு தோன்றத் திரிந்தனர். பாணபத்திரன் அவ்விசையினைக் கேட்டு 'நன்று' என்று வியந்து, ''ஏமநாதனிடம் இசை கற்கும் மாணவர்கள் இசை பாடும் முறை இது, ஏமநாதன் பாடும் முறை எத்தன்மையதோ! நான் நாளைக்கு இசை பாடி அவனை வெல்வது எப்படி!'' என்று நினைத்துக்கொண்டு திருக்கோயிலை அடைந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் சோமசுந்ரதக் கடவுளை வணங்கி, ''ஐயனே! உண்மை வடிவானவனே! அடியேனுக்கு இன்று நினது திருவருளாகிய துணையை அளித்தல் வேண்டும்'' என்று போற்றி வேண்டிக்கொண்டு தன் இல்லத்தை அடைந்து கவலையின்றி இருந்தான்.

சோமசுந்தரக் கடவுள் விறகாளாய் வருதல்

பின்பு, உண்மை, அறிவு, ஆனந்த வடிவாகிய சோமசுந்தரக் கடவுள், தன்னை வருத்தத்துடன் வந்தடைந்து குறையிரந்த பாணபத்திரனது பகைவனை ஓட்டத் திருவுளங்கொண்டு வயது முதிர்ந்து இளைத்த விறகாளைப்போலத் தமது இச்சை யானே திருமேனி கொள்வாராயினர்; அப்போது இடையினில் அழுக்கு நிறைந்த கந்தையை உடுத்தி, வலப்புறத்தில் அமுதத்தைச் சிந்தும் வெண்பிறையினையே வாங்கிச் செருகியது போல வளைந்த கொடுவாளைச் செருகி, வேத முடியைக் கடந்த திருவடிகளில் தேய்ந்த செருப்பினை மாட்டி, பழைய உறையில் இட்ட யாழைத் தோளில் தொங்கவிட்டுத் திருச்செவிகளில் களாவின் சிறிய காயினைத் தொங்கவிட்டுத் தழைத்து நீண்ட சிகை சரிந்திடச் சும்மாடு தாங்கி எழுந்தருளினர். அப்பெருமானர் நாடோறும் விறகினைச் சுமந்து நீண்ட உரோமம் கழியப்பட்டுத் தேய்ந்த பள்ளமாகிய தலையினை உடையவராய், முடியில் மடங்கிய கங்கையும், இடப்பாகத்தில் உறையும் உமாதேவியும் காணமல் வெட்டிய விறகின் சுமையைத் தலைமேல் சுமந்து, என்பு தோன்றித் தசை சிறிதும் இன்றி இளைத்த உடலினைக் கொண்டவராய் வரலானர். அக் காட்சியைக் கண்டவர்கள் அன்புமிக்கு உள்ளங் கனிந்து இரங்க, மனமொழி கடந்த திருவடிகளை நிலமகள், முன்னர்ச்செய்த தவப்பேற்றினல் முடிமிசை தாங்கத் திருமுகத்தில் வேர்வை அரும்பத் திருவாய் குவிந்து சோர்வுக்குரிய ஒலியினை உண்டாக்க வரலானர். கல்லாகியசுமைதாங்கியின்மேல் சுமையினைத் தாங்கலாற்ருதவர்போல் சாத்துவர்; மடுவிலுள்ள நீரைப் பருகுவர்; மீண்டும் சுமையினை எடுத்துத் திருமுடிமேல் வைப்பர்; தலையில் விறகினைத் தாங்குவதால்

ஏற்படும் வெப்பத்தாலாகிய வேர்வை நீங்க இரு கைகளாலும் அடிக்கடி சுமையை மேலே எடுத்து ஏந்தி மதுரை நகருக்குள் புகுவாராயினர்.

**விறகாளாகிய இறைவன் ஏமநாதன் தலைவாசலை அடைதல்**

அப்போது விறகாளாய் வந்த இறைவர், விறகின் விலையை வந்து கேட்பவர்களுக்கு மிக்க விலை பகர்ந்து, பல மாட மாளிகைகள் நிறைந்த வீதிகளையும், இரண்டு தெருக்கள் கூடுமிடங்களையும் மூலை முடுக்குகளையும், பின் பற்றிய மறையினையும், திருமால் பிரமன் இவர்களின் சூழ்ச்சியையும், பகற்பொழுதையும் கடந்து சென்று ஏமநாதன் கடைவாயிலின்கண் செல்வாராயினர்.

**மாலைக் கால வருணனை**

அப்பொழுது காதலரின் வருகையை நோக்கி அழைப்பவர் போல ஆம்பல்கள் வாய் மலரத் திங்கள் புன்முறுவல் தோன்ற எழுந்தது. உயிர்த் துணைவரின் பிரிவினைக் கண்ட மகளிர் கண்ணீர் உகுந்து முகம் வாடுதல்போலத் தாமரை மலர்கள் குவிந்தன. கதிரவன் மேற்குக் கடலில் நீந்திச் சென்றான். ஆண் பறவைகள் வாய்திறந்து ஒலிக்காமல் தன்னருகு வந்து அணையும் குஞ்சுகளையும் பெட்டைகளையும் சிறகினால் அணைத்துப் பெரிய பொழில்களிலுள்ள தங்கள் தங்கள் கூடுகளில் அடங்கின. வண்டுகள் தாமரையாகிய படுக்கையுள் புகுந்து உறங்கின. குரங்கின் கூட்டங்கள் சோலைகளை அடைந்து துயின்றன. முல்லை நிலத்து ஆயச் சிறுவர்கள் நடாத்திச் செல்லும் பசுவின் கூட்டங்கள் கன்றுகளை நினைந்து வீடுகள்தோறும் முற்பட்டுச் சென்றன. ஆரம்பக் கல்வி பயிலும் மாணவச் சிறுவர்கள் தமிழ் நெடுங்கணக்கை முறை வைத்து ஓதும் ஒலி அடங்கியது. நிலமகள், தான் இடையில் உடுத்திருந்த கடலாகிய கரிய ஆடையை உடல் முழுவதும் போர்த்து உறங்குவதுபோலக் கரிய இருள் மெல்லென வந்து உலகினைக் கவிந்தது. பிரிவினால் வருந்திய காதலர்களின் நெஞ்சில் மன்மதன் மலர்க் கணைகளை நாட்டினான்.

உமாதேவியார், திங்களாகிய ஒளி பொருந்திய நெற்றியில் முயற் களங்கமாகிய பொட்டும், செவ்வானமாகிய ஆடையும் இருளாகிய கூந்தலும், விண்மீன்களாகிய ஆரமும் ஆகிய இவற்றால் பொலிவுற்றுத் தனது நாயகனாகிய சோமசுந்தரக்கடவுளைத் தேடிவந்தாள் என்னும்படி மாலைப்பொழுது வந்தது.

திங்கள் வாணுதல் முயற்கறைத் திலகமுஞ் சிவந்த
மங்குல் ஆடையும் மயங்கிருள் ஓதியும் வான்மீன்
பொங்கும் ஆரமும் பொலிந்துதன் கொண்கனைப் பொருப்பன்
மங்கை தேடிவந் தாள்என வந்தது மாலை.